உ

# இறையியல் தத்துவமும் வழிபடும் முறைகளும்

PRINCIPLES & PRACTICE OF THEOLOGY
( TAMIL MEDIUM )

## பகுதி 1

'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்'



நூலாசிரியர்:
மேழியூர் சைவப்புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு

வெளியீடு:
பழநி ஆனந்த இல்லம்.






பாலும் தெளிதேனும்
பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு
நான் தருவேன்
கோலம்செய்
துங்க கரிமுகத்து
தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா

ஔவையார்

உருவாய் அருவாய்
உளதாய் இலதாய்
மருவாய் மலராய்
மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்
கதியாய் விதியாய்
குருவாய் வருவாய்
அருள்வாய் குகனே

அருணகிரிநாதர்

## உபநிடதம்

ஓம் அஸதோமா ஸத் கமய1
தம ஸோமா ஜ்யோதிர் கமய1
ம்ருத்யோர் மா அம்ருதங் - கமய
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஓம் அசத்தில் இருந்து சத்துக்
கும் இருளில் இருந்துஒளிக்கும்
அழிவுகளில் இருந்து பேரின்ப
வாழ்விற்கும் என்னை
அழைத்துச் செல்வீராக.

சிவமயம்



ஈழத்து ''நகுலேஸ்வர'' வடஇலங்கை வலய மேழியூர்

சைவப் புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு

அவர்கள் அருளிச் செய்த

# இறையியல் தத்துவமும் வழிபடும் முறைகளும்

பகுதி ( Part I )

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்"

PRINCIPLES & PRACTICE OF THEOLOGY
( TAMIL MEDIUM )
BY
Saivapulavar Sivasithamparm Thirunavukarasu

முதற் பதிப்பு - **1999**

பழநி ஆனந்த இல்லம்
சித்திர மேழி இளவாலை,
இலங்கை.

பழனி ஆனந்த இல்ல வெளியீடு: **2**

## பதிவுத் தரவுகள்


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | இறையியல் தத்துவமும் வழிபடும் முறைகளும். பகுதி 1 சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவ ஞானம். |
| ஆக்கியோன் | : | சைவப்புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு |
| முதற் பதிப்பு | : | 1999 |
| பிரதிகள் | : | 500 |
| அச்சகம் | : | சௌந்தரம் அச்சகம் பிரதான வீதி, மானிப்பாய். |
| அளவு | : | 1/8 |
| பக்கங்கள் | : | 72 |
| விலை | : | ரூபா 100/= |
| வெளியிடுவோர் | : | பழநியானந்த இல்லம். சித்திரமேழி, இளவாலை, இலங்கை. |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |


## BIBILIO GRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| TITLE | : | PRINCIPLES & PRACTICE OF THEOLOGY (Tamil Medium) **Volum 1** SIVANADIJA SINTHIKUM **THIRU** PERUKU SIVAGNAM |
| AUTHOR | : | SAIVAPULAVAR SIVASITHAMPARAM THIRUNAVUKARASU |
| FIRST EDITION | : | 1999 |
| PUBLISHERS | : | PALANI ANANDA ILLAM, SITHRAMERLY, ILAVALAI, SRILANKA. |
| PRINTERS | : | SOWNTHARAM PRINTERS MAIN STREET, MANIPAY. |
| SIZE | : | 1/8 SIZE |
| COPIES | : | 500 |
| PAGES | : | 72 |
| PRICE | : | RS 100/= |
| COPY RIGHT | : | RESERVED |


# பொருள் அடக்கம்



## மிகவிரைவில் வெளிவர இருப்பன

**பவமதனை அறமாக்கும் பாங்கினில் ஓங்கிய ஞானம்.**

**அதிகாரம்:** பகுதி II

9. நித்தியகர்மம்
10. நீர் பற்றிய தியானம்
11. வீபூதி பற்றிய தியானம்
12. உருத்திராக்கம் பற்றிய தியானம்
13. அக சக்திகள் பற்றிய தியானம்
14. அகண்ட சக்திகள் பற்றிய தியானம்
15. உணவு பற்றிய தியானம்
16. கடமை பற்றிய தியானம்
17. நித்திரை பற்றிய தியானம்

**உவமையிலாக் கலை ஞானம் (பகுதி III)**

18. எண்ணும் எழுத்தும் பற்றிய தியானம்
19. தீட்சா மந்திர எழுத்துக்கள் பற்றிய தியானம்
20. சும்மாஇரு சொல் அற

**உணர்வரிய மெய் ஞானம் (பகுதி IV)**

21. இந்து சமய ஒற்றுமைகள்
22. உலக சமய ஒற்றுமைகள்
23. தீதிலா உலகம் காண்போம்
24. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்.

# வாழ்த்துரை

சித்தாந்த பண்டிதர் சைவப்புலவர்
இளையதம்பி செல்லத்துரை
தலைவர் அகில இலங்கை சைவப்புலவர் சங்கம்

1. இறையியலின் தத்துவங்கள் இவை இவை என்று எடுத்தோதி
மறை நான்கின் மந்திரங்கள் மனத்திரையில் மலர்ந்துவர
துறைசைவ விளக்கனையான் திருநாவுக்கரசனது
நிறைவான திருத்தொண்டு நிலைபெறுக பல்லாண்டு.

2. கன்மவினை தாம் அகல கர்மங்கள் பலசெய்து
இன்பமுடன் இவ்வுலகில் இறைபணியில் இருப்பவர்க்கு
அன்புருவில் சிவபெருமான் அருள்வேடம் பல ஏற்று
நின்றருளும் இயல்புகளைத் தியானிக்கும் வழி வகையை

3. நன்குணர்ந்து தம் அடியார் நன்மைதரும் தீட்சையினால்
இன்னமுதத்திரு நீறும் உருத்திராக்க மணி பெற்று
பன்னிரண்டு சூரியர்போல் பாரெங்கும் ஒளிபரப்பி
நின்று நிலைபெறுக திருத்தொண்டு பல்லாண்டு.

4. சித்தாந்த சிவநெறியில் சிறந்த முடிவுகளை
எத்திறத்தாரும் இங்கு இயல்பாக சிந்தித்து
தத்தமது வாழ்வில் தியானத்தால் முதிர்ச்சிபெற
உத்திகளைத் தந்த இன்நூல் வாழ்க பல்லாண்டு.

5. சித்திரமேழி வாழ் திருநாவுக்கரச னெம்முன்
அத்துவாக்கள் ஆறும் அகல அருள் சுரக்கும்
முத்தித் திருவடியை முப்போதும் சிந்திக்க
பத்திரமாய் தந்த இன்நூல் வாழ்க பல்லாண்டு.



# நூல் ஆசிரியர் அறிமுகம்

சைவப் புலவர் வித்துவான் வ செல்லையா
ஸ்தாபகத் தலைவர் அகில இலங்கை சைவ புலவர் சங்கம், ஓய்வு
பெற்ற அதிபர், யா/இளவாலை மெய்கண்டான் மகாவித்தியாலயம்,
சித்திரமேழி இளவாலை.

இந்த நூல் ஆசிரியரான சைவப் புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு அவர்களை சிறுகுழந்தைப் பருவத்தில் இருந்து இன்று வரை இடையீறின்றித் தெரிந்தவர்களில் நானும் ஒருவனாகும்.

மண்ணில் பிறந்து மழலை மொழி பேசி ஆடி ஓடித் திரிந்த காலம் முதல் கல்வி கற்று அரச கணக்காளராக கல்வித்திணைக் களம் முதல் கச்சேரி யாழ்ப்பாணம் ஈறாக கடைமை செய்து பற்பல அரசாங்க திணைக்களங்களில் தம் காலத்தைக் கழித்து படிப்படியாக தமிழ் மொழியை இலக்கண இலக்கிய முறையில் சாத்திர தோத்திர சமய நூல்களினூடாக கற்று சைவப் புலவராகிச் சமய சேவைக்கு வந்தது எனது மனத்திரையில் அலை அலையாக எழுந்து வருகின்றன.

1963ம் ஆண்டு மட்டக்களப்பு மாநகர மண்டபத்தில் நடந்த அகில இலங்கைச் சைவப்புலவர் மகாநாட்டில் சைவ இளவலாக சத கரியங்கம் எனும் சைவ சிந்தாந்த சாதனை பற்றிச் சொற் பொழிவு செய்து அனைத்து அறிஞர்களின் ஆதரவைப் பெற்றவர். இலங் கை வானொலிக் கூட்டுத்தாபனத்திற்கு அவரை நான் அறிமுகம் செய்த காலம் தொட்டு இன்றுவரை பற்பல சமய நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு இன்று நாடறிந்த சமயப் பிரசாரகராக எமக்கு ஒத்துழைப்புத் தருகின்றார். ஆலயங்களில் நடைபெறும் திருவிழாக் காலங்களில் சமயப் பிரசங்கங்களைச் செய்து வருகின்றார்.

தமிழ் இலங்கிய சாதாரண சொற்களுக்கு அவர் புதுக் கருத்துக்கள் கண்டு கூறக்கூடிய விற்பன்னர். இதற்குக் காரணம் அவரின் பன்மொழிப் பயிற்சி என நாம் கொள்ளலாம் பல வேளைகளில் இவரின் கருத்துக்களுடன் நாம் ஒத்துப்போகாத நிலை வரினும் அவரின் கருத்து விளக்கங்களில் அமைந்த மிகவும் நுணுக்கங்கள் கண்டு உளம் மகிழ்ந்து அவரை உற்சாகம் ஊட்டுவதும் உண்டு.

ஓர் ஆச்சிரமம் அமைத்து சமயப் பணிகளைத் தொடர இருக்கும் அவர் எமது ஆதரவுகளை நாடுகின்றார். எம்மால் முடிந்த காரியங்களைச் செய்து அவரின் பணிக்கு ஆதாரமாக அமைவோமாக.

# நான்முகம்

சுந்தரம் டிவகலாலா
செயலாளர்
கல்விகலாச்சார அலுவலகம்
விளையாட்டு அமைச்சு
வடக்கு கிழக்கு மாகாணம்
திருகோணமலை.

சைவப்புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு அவர்கள் ஓய்வு பெற்ற அரச கணக்காளர். அவர் வாழ்க்கை என்னும் முயற்சியை ஓர் ஆக்க காரணியாகக் கொண்டு நாம் இறைவனைத் தியானம் செய்து சமய வாழ்வில் இறைவனோடு இணைந்து வாழவும் தமிழ் சமூகமும் ஏனைய உலக சமூகங்களும் இறைவனின் இயல்புகளை அறிந்து உணர்ந்து இன்பமாக வாழ ஓர்வழிகாட்டி நூலாக இந்நூலைத் தந்துள்ளார்.

இந்நூல் இறையியல் தத்துவமும் வழிபாட்டு முறைகளும் எனப் பரந்து விரிந்து அமைந்த சமய தத்துவஞான அறிவுக் களஞ் சியங்களை தாம் வாசித்து அறிந்தவாறு உணர்ந்தவாறு நூலாகத் தந்திருக்கின்றார்.

இந்நூல் மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும ஏனைய அறிவுத் துறையில் ஈடுபட்டு உழைக்கும் அறிஞர்களுக்கும் ஓர் பயன் படும் வழிகாட்டி நூலாக அமைகின்றது என்பது எனது தாழ்மை யான அபிப்பிராயமாகும்.





உ

# மதிப்புரை

சைவப்புலவர், சிந்தாந்த பண்டிதர்
மு. திருஞானசம்பந்தபிள்ளை
சைவசித்தாந்த உயர் நிறுவனம், தலைவர், கொக்குவில்.

''இறையியல் தத்துவமும் வழிபடும் முறைகளும்'' என்ற நூலின் முதலாம் பகுதி வெளியிடப்படுகின்றது. இறையியலையும் தத்துவத்தையும் உள்ளவாறு உணர்வதற்கு அவனருளும் நுண் மான் நுழைபுலமும் கைவரவேண்டும். அவ்வாறு கைவரப்பெற்றவர்கள் அத் தத்துவப் பொருளாக விளங்குகின்ற இறைவனை வழிபாடுசெய்யும் செயலில் தம்மை ஈடுபடுத்துவர். அவ்வண்ணம் அவர்களால் மேற் கொள்ளப்பட்ட முறைகள் பின்வருவோருக்கு வழிகாட்டும் வழிபாட்டு முறைகளாக மிளிர்கின்றன.

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம பன்னிரு திருமுறைகளின் வழியாலே நமக்குக் கைகூடப்பெறும். சிவபெரு மானைத் தியானஞ் செய்வதற்கு வழிகாட்டியாகவும், தத்தமது இஷ்டமூர்த்திகளுடன் தியானத்தின் மூலம் இணைவதற்கும், உணர் வரிய மெய்ஞ்ஞானத்தின் அருள் கடாட்சத்தினால் நடராஜமூர்த்தியின் குஞ்சித பாத நிழலில் ஒடுங்கி, மீண்டும் சுயநிலைக்கு வந்து தத்தமது நித்தியநைமித்திய கடமைகளில் ஈடுபட்டு உழைத்து அறிவு, செல்வம், அன்பு நிறைந்த ஒரு சமூக, பொருளியல் வாழ்வுகளில் திற்போருக்கும், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்குவிதமான தொண்டு களைச் செய்வதற்கும் இந்நூல் ஊக்கந்தருகின்றது

நூலாசிரியர் எமது சாதாரண வாழ்க்கை அனுபவங்களைத் தெய்வீக சிந்தனைகளுக்கு உரிய தியானமாக எடுத்து விளக்கிச் செல்வது சமயதத்துவங்களை நாம் எளிதில் புரிந்து கொள்ள உதவு கின்றது. இயற்கையில் காண்கின்ற பொருள்களில் எல்லாம் இறை இயல்பையும், இறைதத்துவத்தையும் சுட்டிக்காட்டி அவ்வியற்கைப் பொருள்களையே வழிபாடாற்றுவதற்கு உரிய சாதனங்களாகக் கைக் கொண்டு வழிபடும் முறையினையும் நூலாசிரியர் காட்டுந்திறன் சிந் திக்கத்தக்கது.

வேதாந்தம் தெளிவே சைவ சித்தாந்தம் என்ற சித்தாந்தக் கோட்பாட்டினைத் தம் அனுபவமுதிர்ச்சியினால் உணர்ந்த நூலாசிரி யர் பணி போற்றுதற்குரியது. மேலும் பலசிந்தனைத் தெளிவுகளைக் கண்டு பல நூல்களைச் சமூகத்திற்கு அளிக்க எல்லாம் வல்ல பரம் பொருள் அருள்செய்ய வேண்டுமெனப் பிரார்த்திப்போம்.

உ

# அணிந்துரை

**சைவப்புலவர் வ. கந்தசாமி**
*செயலாளர், அகில இலங்கை சைவப்புலவர் சங்கம்.*

சமய நூல்களில் தத்துவஞானம் எனவும் பதி, பசு, பாசம் என சைவசித்தாந்த நூலகளில் அமைந்த உண்மைகள் சிறப்புபெற பதின்நான்கு மெய்கண்டசாஸ்திரங்களையும், பன்னிரு திருமுறைகளையும், வேதஆகம பிரமாணங்களையும் ஆதார சுருதியாகக்கொண்டு சமய நூல்கள் அமையவேண்டும். அவை சாதகனுக்கு உலகில் பயன்படும் பொருள்கள் முதல் நடராஜ பெருமானின் திருவடியில் முத்தியின்பம்காண வேண்டும் என்ற ஓர் இலட்சியம் ஏற்படுத்தும். அதனை அடையும் பக்குவம், முதிர்ச்சி வரும் காலம் வரை அந்த நூல் பயன் பட வேண்டும்.

எமது அன்புக்கும், மதிப்புக்கும் உரிய சைவப்புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு அவர்கள் ஆக்கிய இறையியல் தத்துவமும் வழிபாட்டு முறைகளும் என்ற நூலில்முதலாம் பகுதி ஆகிய சிவனடியே சிந்திக்கு திருப்பெருகு சிவஞானம் மேற்கூறிய சிறப்புக்களை தன்னகத்தே கொண்டு உள்ளது.

இப்படி பெறுமதி மிக்க ஓர் நூல் எமது சைவப் புலவர் சங்க உறுப்பினரிடம் இருந்து வருவது மிகவும் ஆர்வத்துடன் வரவேற்று, ஏனை சைவப் புலவர்களும் தமது ஆக்கங்களினால் பல சைவ சமய நூல்களை தமிழ் தாய்க்கு அர்ப்பணம் செய்யுமாறு அன்புடன வேண்டுகின்றேன்.

125. அரசடி வீதி,
யாழ்ப்பாணம்.

இங்ஙனம்
சிவப்பணியில்
வ. கந்தசாமி



# முன்னுரை

இறையியல் மிகவும் ஆழமான பரந்து விரிந்த வானம் போன்றது. சமயங்களும் சமய வழிபாட்டு முறைகளும் வானவில் போன்றவை.

சத்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலகம் எல்லாம் என்பது ஆரிழ் வேதம்.

நவீன கல்வி முறைகள் எமது வாழ்க்கைக்கு தேவையான பொருள்களையும் சேவைகளையும் ஆக்கி விநியோகம் செய்து நுகர வையே ஆதார சுருதியாக கொண்டு வாழும் போது ஆன்மீக தேவை களைப் பூர்த்தி செய்ய எமது அகப்புறச்சூழலை அறிந்து இறைவனின் திருவருளை அனுபவிக்க உதவும் முகமாக எடுத்த முயற்சியே இந்த நூலாகும்.

இறைவன் எம்மோடு எமக்கு துணையாக எப்போதும் இருக்கின்றார். என்பதனை நாம் காணும் அகப்புற சூழலில் வைத்து காட்டுவதும். 12 திருமுறைப் பாசுரங்களை ஆதாரமாக வைத்து ஓர் முழுமையான சமய எண்ணக் கருவை எடுத்துக்காட்ட இந்த நூலின் முதலாம் பகுதியாகிய சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் என்ற நூலை வடிவமைத்தேன்.

இந்த முயற்சிக்கு வாழ்த்துரை வழங்கிய சைவப்புலவர் இ. செல்லத்துரை அவாகட்கும, நூல் ஆசிரியரை அறிமுகம செய்த சைவப்புலவா வ. செல்லையா அவர்கட்கும், மதிப்புரை வழங்கிய சைவப்புலவர் மு. திருஞானசம்பந்தபிள்ளை அவர்கட்கும், அணிந்துரை அளித்த சைவப்புலவர் வ. கந்தசாமி அவர்கட்கும் எமது அன்பான நன்றிகள் உரித்தாகுக.

வட கிழக்கு மாகாணசபையின் கல்வி அமைச்சுச் செயலாளர் சுந்தரம் டிவகலாலா அவர்கள் இந்நூலிற்கு அளித்த நூன்முகம் மிகவும் தேவையானது. அவர்கட்கு எமது அன்பான நன்றிகள் உரித்தாகுக.

இந்த நூலை அழகுற அச்சமைத்து உதவிய சௌந்தரம் அச்சகத்தாருக்கும் எமது நன்றிகள் உரித்தாகுக.

பழநி ஆனந்த இல்லம்
சித்திரமேழி,
இளவாலை.
01-11 - 1999

இங்ஙனம்
தங்கள் அன்புக்குரிய
சிவசிதம்பரம் திருநாவுக்கரசு

இந்த நூலை வாசிக்கும்போது எழுத்துப்பிழைகளை கருத்துப்பிழைகளை, எண்ணக் கருத்துக்களை விபரீதமாக எடுத்துரைத்தல் போன்ற குறைகுற்றங்களை காணும் போது அதனை எமக்கு அறியத்தரவும். தங்களின் மதிப்பீடு இந்நூலை மறுபதிப்பு செய்யும் போது திருத்தவும் ஏனைய நூல்கலை சரியாக வெளியிடவும் எமக்கு உதவும். உங்கள் நயத்தையும் அறியத்தாருங்கள் இது வாசகர் களுக்கும் நூல் ஆசிரியருக்கும் ஓர் நல்ல தொடர்பை ஏற்படுத்தும.

ஆலய அறக்காவலர்களே! அர்ச்சகர்களே!
தர்மகர்த்தா சபைத் தலைவர்களே!
திருவிழா உபயகாரர்களே!

உங்கள் ஆலயத்தில் பக்தி, ஞானம், திருவருள் பரவ இறைவன் புகழைப் பாடவேண்டும் பேச வேண்டும். முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை இஸ்டமூர்த்திகளுடன் சேர்த்து ஹோமம், பூசை, தியானம் என்ற வழிபாட்டு கிரமத்தில் நிற்க பக்கர்களை உற்சாகமூட்ட வேண்டும்.

முருகன், விநாயகர், நாராயணமூர்த்தி, சக்தி, சிவபெருமான் முதலிய தெய்வங்களின் அவதார திருவிளையாடல்களை புராணிகர் மரபுவழி நின்று சமய சொற்பொழிவுகளையும், பண்ணிசை நிறைந்த கதாப்பிரசங்கங்களையும் செய்ய விரும்புகின்றேன்.

நீங்கள் எம்முடன் தொடர்பு கொள்ளும் விலாசம்.


சைவப்புலவர் சிவசிதம்பரம் திருநாவுக்கரசு
பழநி ஆனந்த இல்லம்
சித்திரமேழி இளவாலை.
அல்லது
ஞானவைரவர் கோவிலடி,
வடலியடைப்பு,
பண்டத்தரிப்பு.


# அவை அடக்கம்

1 கலியுக தோசம் மிஞ்ச, கடவுளும் தாமே என்னும்
நலியுறு மனிதர் நாளும் நன்நெறி வாழ்வு நாட
புவியினில் பரமசக்தி பிறரிலும் எனிலும் போற்றும்
கவியுறு காட்சி நல்காய்! கற்பக விநாயமூர்த்தி.

2. உலகமே பரமன்கோயில், உயிர்களே அவரின் வீடு
பல கலை ஞானம் கற்றும், பக்தியால் உயர்வீர் நாளும்
இரவினில் விளித்து நீவிர் இரவியே இல்லை என்றால்
பர ஒளி விளித்துக் காண்பீர், பாசவினையினைக்கடிந்துவாழ்வீர்.

3. நித்தலும் காளி அன்பின் கருணையில் குழந்தையாகி
சத்திய தர்ம வாழ்வில் தன்னையே எமக்கு ஈந்து
தக்கனேஸ்வரத்து அமர்ந்து தரணிமீது ஒளியை வீசி
எத்திசை மனிதர்க் எந்தை ஈசனைக் காட்டுவாரே,

4 துறவிகள் அணியினாலே, தூய்மையில் உலகை வைத்து
அறநெறி காட்டி என்றும் அன்பினில் வாழ்வு சேர்த்து
செய்திடும் கர்மம் எல்லாம், சென்னியில் யாகமாக்கி
மெய் நெறி காட்டும் ராம கிருஸ்ண தேவனே போற்றி போற்றி

5. கன்னிய மயிலின் முட்டை கோழியடை காத்தாற்போல
சென்னியில் என்னை வைத்து; சிவ உரு அணியில் சேர்த்து
அண்டமும் பிண்டம் ஆர்க்கும், அளப்பெரும் காட்சி நல்கி,
மண்முதல் தில்லை காட்டும், மயில் அமர் வேலா போற்றி.

6. என்பொருள் என்று சொல்ல என் பொருள் ஒன்றிங்கில்லை
மென்முலை உமையாள் பாலை ஞானசம்பந்தனே ஏற்று அன்று
நான்மறை ஞானம் தந்தான் நான் அதில் பிளைத்துக்கொண்டேன்
மேன்மைகொள் சைவநீதி என்தன் மேழியூரிலும் நிலைத்தாலே.

7 ஆதலால் தமிழ் நூல் கண்ட அகத்திய ஞானசங்கம்
மாதவன் அருள் ஈது என்று என்னையும் தம்மில் சேர்பார்
குஞ்சரமீது செல்லும் மன்னவன் படையினூடே
சஞ்சலம் இன்றி ஊரும் நாயும் சேர் பவனிபோல.

# சமய தத்துவம்

ஒரே மனித சமுதாயம் நாடு, மொழி, சாதி, குலம், சமயம் ஆண், பெண் குழந்தை காளை, வயோதிபர் என பிரிக்கப்பட்டு இருந்தாலும், தன்னையும் தன்னைச் சூழ்ந்துள்ள பொருட்களையும், அகப்புறச் சூழலையும், முழுமையாக அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஊக்கம் அனைவருக்கும் பொதுவாக அமைந்து இருக்கின்றது. இந்த விடுப்பு ஊக்கத்தை நிறைவு செய்வதே பூரண கல்வியாகும்.

இந்தப் பூரண கல்வியை தமது இளய சந்ததியினர்க்கு, அளிப்பதற்காகவே உலகில் பல மொழிகள், பல சமயங்கள், சமூக கலாச்சார பண்பாட்டு விழுமியங்கள் தலைமுறை தலைமுறையாக ஆதிகாலம்தொட்டு இன்றுவரை தொடர்ந்து வருகின்றன. அகப்புறச் சூழலை அறிந்து ஓர் பூரண வாழ்க்கைவாழ தமது சமயம், மொழி போதுமானது என அந்த அந்த சமூகம் கருதுகின்றது.

இந்த உலகத்தின் தோற்றத்திற்கும், ஒவ்வோர் உயிரையும் உள்ளுணர்வாக நின்று வழிகாட்டுவதற்கும், ஒரு கடவுள் உண்டு என்பது அனைத்து உலக மக்களாலும், தத்தமது மொழிகள் மூலமும், சமய கலாச்சார பண்பாட்டு சாதனை மூலமாகவும் தெரிந்துகொள்ளப்பட்ட உண்மையாகும். ஆனால் அந்த கர்த்தாவை எப்படி அடைவது? எப்படி காண்பது? அந்தப்பரம்பொருளை எந்தவிதமான சாதனையால் அடைவது? என்ற விபரங்களில் தான் கோடாகோடி சமய பேதங்களையும், சமூக கலாச்சார வழிபாட்டு முறைகளையும் நாம் சமய சமூக கலாச்சார நூல்களினூடாக, மொழிகளினூடாக வாசித்து அறிந்து மனக் குழப்பம அடைகின்றோம்.

எமது அறிவுக்கும், காட்சிக்கும் எட்டிய ஒரு பொருளை, ஆதாரமாக வைத்துக்கொண்டு அந்தப்பொருளினூடாக ஒரு முழுமையான பூரணப்பொருளைத்தெரிந்து கொள்ள முயற்சி எடுப்பதே சமய சாதனையாகும்.

எமது கண்முன் தெரியும் பொருட்கள் யாவை? புல், பூண்டு, புழு, மரம், செடி, கொடிகள், பறவை, பாம்பு, கல், மனிதர், மிருகங்கள், முனிவர்கள், ரிசிகள், கலைஞர்கள், அறிஞர்கள், நதி, கடல், குளம், வயல், தீ, காற்று, வானம், சந்திரன், நட்சத்திரங்கள், சூரியன், நிலம், மண், இடி, மின்னல், முகில், கோள்கள் (நவக்கிரகங்கள்) இசை, ராகம், தாளம், பாட்டு, சொற்கள், வசனங்கள், கவிதைகள்



கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் தரும் கலைச்சிற்பங்கள், சின்னங்கள், அனைத்தும் எம்சுய அறிவுக்கு புலப்படக் கூடிய பொருட்களாகும். மண், நீர், தீ, காற்று, வானம் எம் அறிவுக்கெட்டிய ஒருமையைக்காட்டும் பொருள்களாகும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஒவ்வொருவரும் தத்தமது சரீரத்தினால் உணர்ச்சி பூர்வமாக அனுபவிக்க வேண்டிய பொருட்களாகும்.

எம் கண்ணால், காதால், நாக்கால், மூக்கால், தொடுகையால் அனுபவித்து மகிழக்கூடிய பொருட்கள் இரசித்து மகிழக்கூடிய உருவங்கள் எழுத்துவடிவாலும், சொல்வடிவாலும் சிற்ப ஓவிய வடிவங்களாலும் அமைகின்றன. இதனால் இந்தப்புலன்களையுடைய அனைவரும் தமது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்ற பயிற்சி வேறுபாட்டினால் ஒரேபொருளை பலவிதமாக உணர்ந்துகொள்கின்றார்கள். இப்படி பற்பல விதமாகப் புரிந்து நிற்கும் ஆற்றல், உணர்ந்துகொள்ளும் ஆற்றல் நினைந்துகொள்ளும் ஆற்றல், இந்தப்பொருள் இதுதான் என நிச்சயப்படுத்தும் ஆற்றல், ஒருவருக்கு ஒருவர் வேறுபடுகின்றது. அதனால்தான் ஒருவர் தான் ஒருபொருளை புரிந்துகொண்டவாறு புரிந்து, அனைவரும் தன்னைப்போல் மகிழ்ச்சியாக வாழட்டும் என்ற ஓர் துடிப்பினால் தமது சுய அனுபவத்தை மற்றவர்களுக்கு எடுத்துச்சொல்கின்றார். சித்திரமாக, ஓவியமாக காட்டுகின்றார். இசை இயல், நாடகமாக எடுத்துக் காட்டுகின்றார்.

எம்மால் புரிந்துகொள்ளக்கூடிய மெய்பாடுகளான இளிவரல், நகை, அழுகை, மருட்கை, அச்சம் பெருமிதம், வெகுளி, உவகை, அன்பு, கருணை தயை ஆனந்தம், விருப்பு, வெறுப்பு முதலிய உணர்ச்சி வெளிப்பாடுகளை ஒரு மொழியோ சமயமோ எடுத்துக் காட்ட முடியாது.

இத்தனை சுய அனுபவங்கயையும் கொண்டு, அறியமுடியாத பொருளைப்பற்றி, இந்தப்பொருள் இப்படித்தான் இருக்கும், என கற்பனை செய்து எழுந்தவை சமய இலக்கிய இதிகாசங்கள், மந்திரங்கள், இவை மக்களை சமய வழியில் செல்ல தூண்டுகின்றது. அனைத்து மக்களையும் தீயவழிசெல்லாது நல்வழிசெல்ல வழிகாட்டுகின்றன. எனவே எத்தனை மொழிகள், எத்தனை சமய இலக்கியங்கள், மந்திரங்கள் இந்த உலகில் நிலவி வருகின்றதோ அத்தனை மொழிகளிலும், சமய இலக்கியத்திலும் கண்டு தன்னைத்தான் உயர்த்திக் கொள்ளுமாறு திருமுல நாயனார் ஒரு திருமந்திரத்தில் எமக்கு வழிகாட்டுகின்றார்.

பண்டிதர் என்போர் பதின் எட்டுப் பாடையும்
கண்டவர் கூறும் கருத்தறிவார் என்க
பண்டிதர் தங்கள் பதின் எட்டுப் பாடையும்
அண்ட முதலாய் அரண் சொன்னவாறே.

கற்பனை வேறு. காணும் சுய அனுபவகாட்சி வேறு. எனவே எமது சுய அனுபவத்தோடு ஒத்துவராத அனைத்தையும் வெறும் கற்பனை எனத்தள்ளவேண்டும். எமது கற்பனைகளை செய்வதற்கு முன்னர் எமது கல்விமுறைப் பயிற்சியினால் எம்முன் காணப்படும் பொருளை அவற்றின் குண இயல்புகளை நாம் சரியாக காணும் நிலைக்கு உயர்ந்து கொள்ள வேண்டும். எமது மனக் கற்பனைகளை அந்தப் பொருளின்மீது படரவிட்டு பின் அந்தப்பொருளை நோக்கும் போது அந்தப்பொருள் எமது மனக் கற்பனை வடிவமாகத்தோன்றும். எனவே ஒன்றை வேறு ஒன்றாக காணும் நிலைக்கு வந்துவிடுவோம்.

எனவே அனைத்து வடிவங்களையும் 36 வகையாக பிரித்து காணப்படும் பொருட்கள் அனைத்தும் 36 வடிவங்களின் தனித்தனிச் சேர்க்கையும, கூட்டுச் சேர்க்கையும் என ஆரம்பத்தில் அறிந்துகொள்ள வேண்டும். சங்கீதத்தில் 7 சுரங்கள்போல இரசாயனக் கல்வியில் அணுக்களின் வகைபோல சமய தத்துவஞானத்திலும் 36 விதமான அடிப்படைப்பொருள்கள் உண்டு அந்த வடிவங்களை கண்ணால்காண, காதால் கேட்க, மனதினால் நினைக்க நாம் கற்றுக்கொள்ளவேண்டும்.

''மண்முதல் சிவம் ஈறாக வடிவு காண்பதுவே காட்சி''

இந்த 36 அடிப்படைப்பொருள்களினால் புல்முதல் தேவர் வரை உள்ள 18 பிறப்புக்களும் 84 நூறுஆயிரம் யோனிபேதங்களாக 7 வகை உலகங்களில் பிறந்து வளர்ந்து இறக்கின்றன.

எம்கண்முன் தெரியும் இந்த உலகம் மண், நீர், தீ, காற்று வானம் முதலிய பஞ்சபூதங்களினால் ஆனவை. இதனை நாம் கடலும் கடலைச் சார்ந்த வாழ்க்கையும், காடும் காட்டைச் சார்ந்த வாழ்க்கையும், வயலும் வயலைச் சார்ந்த வாழ்க்கையும், மலையும் மலை சார்ந்த வாழ்க்கையும்,வனாந்தரமும் வனாந்தரத்தைச் சார்ந்த வாழ்க்கையும், நகரும் நகரைச்சார்ந்த வாழ்க்கையும், தனித்த தனிமையும் தனிமையான வாழ்க்கையும் என ஏழுவிதமாக கண்டு அறியலாம்.

இதேபோல் நாம் ஓர் இடத்தில் இருந்து நாம் எமது அகச் சூழலாகிய இந்த சரிரத்தையும் அறியலாம்.



இந்த உடலும் மண், நீர், தீ, காற்று, வானம் ஆகிய பஞ்சபூதங்கள் ஆனது. மாப்பொருள், வெல்லம், புரதம், கொழுப்பு கனி உப்புக்கள், கார அமில திரவங்கள் இவைகளைத்துண்டும் விதம் விதமாக கலங்கள் இழையங்கள் இவற்றை இயக்கும் மூச்சுக்காற்று ஆகிய பிராணன் அந்த பிராணன் 10 ஆகவும் 100 ஆகவும் 1000 ஆயும் கோடாகோடியாக பிரிந்து நாடி நரம்பு நாளங்களை இயக்கு வதும், அதனால் இழையங்களும் கலங்களும் இயங்குவதையும் காண லாம். இந்த இயக்கத்தினால் வரும் அறிவு, உணர் மெய்பாடு சிந்தனை தொழிற்பாடுகள் துன்பத்தைவிட்டு விலகவும் இன்பத்தை நாடி அணையவரும் ஊக்கங்கள் அனைவராலும் சுய அனுபவத்தில் கண்டுகொள்ளக்கூடிய விடயங்களாகும்.

இத்தனை பொருட்களையும், இயக்கங்களையும், உணர்ச்சி களையும் சமய தத்துவ ரீதியாக வகைப்படுத்திக் காட்டுகின்றார்கள். சைவசித்தாந்திகள்.

நிலம், நீர், தீ, காற்று, வானம் என ஐந்து பூதங்களையும்
சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்து தன்மாத்திரைகளையும்
மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐந்து அறிவுக்கருவிகளையும்
கை, கால், நா, மலவாய், சலவாய் என ஐந்து தொழில்கருவிகளையும்,
மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கு அகக்ரணங்களையும்,

தன்னிலும் தன்முன் காணப்படும் 18 பிறப்புக்களிலும் சந்தேக விபரீதம் இன்றி கண்டு கொள்வாயாக! என்பதே இந்து சமயதத்துவ ஞானிகளின் உபதேசம் ஆகும்.

கல்வியில் சிறந்த பெரியோர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய பரிமாணங்கள் ஏழு ஆகும். அவை எவை?

- காலம் — இது நேரத்தைக் குறிக்கும் தத்துவம்
- விச்சை — இது தூரத்தைக்குறிக்கும் தத்துவம்
- நியதி — இது நிறையைக்குறிக்கும் தத்துவம்
- அராகம் — இது கருதுகோள்களை நிச்சயித்து அமைக்கும்
- கலை — இது உண்மை இதுதான் என நிச்சயித்து அதனை எடுத்து விளக்கும் ஆற்றலைக் குறிக்கும் தத்துவம்
- பிரகிருதி— மூலப்பொருள்களில் இருந்து நினைத்த உருவத்தை ஆக்கும் ஆற்றல், தத்துவம்.
- புருடன் — இது ஆளுமையைக் குறிப்பது – ஒவ்வொரு பொரு ளும் ஒவ்வொரு உயிரும் தனக்குரிய தனித்துவத்தை நிலைநாட்டும். ஓர் சமூக கூட்டுறவு ஆற்றல் தத்துவம்.

ஆளுமை விருத்தி ஆற்றலைத்தருகின்றது. ஆற்றல் முக்குணப் படுகின்றது. அதனால் வேறு பட்ட அளவீடுகள் காலத்தில் தூரத்தில் நிறையில் கருதுகோள் நிச்சயிப்பதில் தொழில் நுட்ப பரிமாணங்களில் வேறுபாடு அடைய செய்கின்றது.

எனவே 18 பிறப்புக்களுக்கும் உள்ள 24 ஆன்ம தத்துவங் களின் வேறுபாடுகளையும் இந்த ஏழுவகை பரிமாணங்களையும் கடந்து நாம் நோக்கினால் அனைத்துக்கும் மூலமான ஓர்பொருள் தெரியவரும்.

காலதேச வர்த்த மானங்களை கடந்து நாம் ஆழ்ந்து சிந் திக்கும்போது எம் அகத்தே அக ஓசை எழுந்து வருவதை அவதானிக் கலாம். இந்த ஓசை அகநாதம் வெளிவரும்போது வாக்காக மலர் கின்றது. இந்த வாக்கு ஓர் மொழியினூடாக சொல்லாக வருகின்றது. இந்த அக ஓசையை அருள் ஓசை, தெய்வீகஓசை, குழுவின் குரல், ஏன் இறைவனின் வாக்கு என அனைவரும் போற்றிப் புகழ்ந்து மகிழ்கின்றனர். கடவுளின் முதலாவது அணைக்கும் கரம் என பக் தர்கள் மகிழ்ந்து ஆனந்த களிப்பு எய்துகின்றனர். இந்த அக ஓசையை தொடர்ந்து வாழும்போது எம் அகத்தே ஓர் இனிய உணர்வு தோன்றுகின்றது இந்த உணர்வு முதிர்ச்சியின் அக ஒளி தோன்றுகிறைது இந்த அக ஒளி அக உணர்வு அகவாக்கு அனுப வம் வெளிவரும்போது இவை நாம் காணும் அனைத்துப் பொருள் களிலும் பரவிநிற்பதைக் காணலாம்.

இப்படி எம் அகத்தே அக ஒளியாய், அக ஓசையாய் அனைத்தையும் கண்டு காட்டி நாம் கற்பனையில் அனைத்தையும் படைத்து, காத்து, நீக்கி, மறைத்து அருளும் ஐவகை தொழில்பா டுகளை ஏற்படுத்தும் உந்தல்களைக் கண்டு அந்த உந்தல்களை நாம் தொடர்ந்து கவனித்தால் இந்த உந்தல்களை தரும்சக்தி பீடம் இருப்பதை அறியலாம். இந்த சக்தி பீடத்தை சாதாக்கிய தத்துவம் என அழைப்பர். இந்த சாதாக்கிய பீடத்தில் எழுந்துவரும் மூல சக்தியை சக்தி என்றும் இத்தனை சக்திகளும் நாம் உறங்கும்போது ஒடுங்கும் இடத்தை சிவம் என அழைப்பர். நாம் உறங்கும்போது அனைத்தும் ஓடுங்கவும் விளிக்கும்போது அனைத்தும் தோன்றி நிலைக்கவும் செய்யும் பீடத்தை சிவம் என அழைப்பர்.

என்ன அதிசயம் எல்லா உயிர்களும் விழிப்பு நிலையில் அனைத்தையும் காண்கின்றன. உறக்கத்தில் அனைத்தும் ஒடுங்க சடம்போல அறிவற்றுக்கிடக்கின்றன. ஆழ்ந்த உறக்கத்தில் கனவு காண்கின்றன. இந்த சுய அனுபவத்தில் யாருக்கும் சந்தேகம் இல்லை. நாம் ஒவ்வொரு நாளும் செய்யும் நிகழ்ச்சிகள் இவை.



ஆனால் நாம் எப்படிப்பிறந்தோம்? இறக்கும்போது எப்படி இருக்கும்? என்ற விடயத்தைத்தான் நாம் கற்பனை செய்தும் பார்க்கமுடியாத யாராலும் விடுவிக்க முடியாத ஓர் புதிராக இருக் கின்றது. சிந்தனை செய்ய முடியாவிட்டாலும் எம் கண்முன்னே பலர் பிறக்கின்றார்கள் இறக்கின்றார்கள் இன்னும் பலர் பிறப்பார் கள் இறப்பார்கள் பொம்மைபோல ஒன்றும் அறியாத சிறு குழந்தை களாக பிறந்து தாயின் மடியில் பால் அருந்தி இந்த மண்மீது மண் அளைந்து ஓடி விளையாடி அறியாமையினால் அடிபட்டு அறைபட்டு அனைவரோடும முரண்பட்டு ஓடிவிழுந்து எழுந்து இத் தனை மடமைகளையும் பின்நோககிப்பார்த்து தன்மீதுதான் இரக் கப்படும் நிலையும் பிறர் அறியாமையினால் இடர்படுத்த துன்பப் பட்டு பிறர் தமக்கு துன்பம் கொடுக்க அதனைச் சகித்து தயை என்னும் தியானத்தால் அமைதி அடைவர்.

நாம் அன்னையின் கர்ப்பத்திலிருந்து பிறந்து அறியாமையில் கிடந்து உழன்று ஓர் இருள் மயமான வாழ்க்கையை பின்நோக்கிப் பார்க்கலாம். இந்த அனுபவமே இறக்கும்போதும் இருக்கும் என ஊகித்து அறியலாம். இந்த அவத்தை நிலையை பேர் உறக்கம் என அழைப்பர் புலவர்கள். அப்படியானால் அறியாமையில் பிறந்து அறிவு நிலையில் வாழ்ந்து அறிவற்ற நிலையில் இறப்பதா வாழ்க்கை? என்ற கேள்வி எழலாம்.

அப்படியானால இந்த அறியாமை நிலையில் இருந்து பிறப்பு இறப்பு வாழ்க்கையைக் கடந்து உண்மை நிலையை அறிய என்ன வழி இருக்கின்றது? என்ற கேள்வியை நாம் குருநாதரிடம் கேட்டால் அவர் கூறுவார் மகனே ஓர் வழி இருக்கின்றது. அந்த வழிதான் தியானம்.

கோடானுகோடி மக்கள் இந்த மண்மீது பிறந்து வாழ்ந்து இறந்துபோகலாம. ஆனால் இந்த பூமியும் வானமும் தொடர்ந்து நிலைத்து இருக்கும். அதுபோல் நீயும் கோடானுகோடி பிறவிகள் எடுக்கலாம் வாழலாம் ஆனால் உன் உயிர் நிலைத்து இருக்கும். ஒவ்வொரு நாளும் நாம் உறங்கலாம் உறக்கத்தை விட்டு எழுந்து வாழலாம மீண்டும் உறங்கலாம் ஆகில் இந்த உயிர் நிலைத்து நிற்கும். இநத சரீரம் குழந்தையாக காளையாக மனிதனாக வயோதிபனாக, முதியோனாக மாறலாம் மாறாது உயிர் நிலைத்து இருக்கும். இப்படி மாறாத உயிரையும உயிருக்கு உயிராக இருக்கும் இறைவனையும் காணும்வழியே தியானம. தியான அனுபவம் பெறும் நிலையை உயிர்ப்படக்கம் அல்லது துரியாதீதம் என இந்துசமய சைவசமய நூல்கள் சிறப்பாக குறிப்பிட்டுக்காட்டும். பகவத்கீதை நூலில் போர்க்களத்தில் கண்ணன் அருச்சுனனுக்கு கூறிய அறிவுரை கள் இவை.

தியானம் கைகூடினால் அக ஓசை தரும், நாலு அருள் வடிவங்களை நேருக்கு நேரே காணலாம். கல்வி, கலை ஞானத்தைத் தரும் அகஓசை ஒன்று உளது. இந்த அகஓசை தரும் சக்தியை சரஸ்வதி என்றும், அந்த சக்தி ஒடுங்கும் இடத்தை பிரம்மா என்றும் அழைப்பர் புரோகிதர்கள்.

இதேபோல அனைத்துப் பொருள்களையும் பயன்படதிட்டமிட்டு ஒருங்கு இணைத்து செயற்படுத்தும் ஆற்றல், மூலவளங்களை கண்டு அறிந்து இயற்கை மூலவளங்களை செல்வமாக பெருக்கி செல்வச் செழிப்புடன் திகழச்செய்யும் ஆற்றல் இந்த ஆற்றலை மகாலட்சுமி என்றும் இந்த சக்தி தோன்றி நின்று ஒடுங்கும் இடத்தை மகாவிஷ்ணு என்றும் அழைப்பர். அர்ச்சகர்கள் எமக்கு வேண்டியவற்றை உருவாக்கக் கூடிய ஆற்றல் இருப்பதுபோன்று பயன்படாதவற்றை அழிக்கும் ஆற்றல்தரும் சக்திகளை கௌரி எனும் அந்த சக்திகள் தோன்றி நின்று ஒடுங்கும் இடத்தை ஸ்ரீஉருத்திரர் என்றும் அழைப்பர் திட்சகர்கள்.

அதுமட்டும் அல்ல. எமது அகத்தே எமது கனவு, நினைவு, உறக்கம், பேர் உறக்கம் உயிரடக்கம் ஆகிய அவத்தைகளை ஏற்படுத்தும் சக்திகளையும் அந்த சக்தி ஒடுங்கும் இடத்தை மகேஸ்வரர் என்று அழைப்பர் வேதியர்கள்.

அனைத்து அருள் வடிவங்களுக்கும் ஆதார மூல சக்தியாக திகழும் சக்தியை சதாசிவ சக்தி என்றும் அழைப்பர். இந்த சக்திகளும் சக்திகள் ஒடுங்கும் இடத்தையும் நாம் உருவமாக காணப்படும் எந்த பொருளிலும் உடல் உயிர் சேர்வையிலும் காணலாம். நம் உடலிலும் அகத்தேயும் காணலாம். பிற உயிர் உடல் சேர்வைகளிலும் காணலாம்.

ஆனால் கண்ணால் காணமுடியாது புலன்களால் புரிந்து கொள்ள முடியாது இயங்கும் சக்திகளும் உண்டு இவை அருவம் ஆனவை. 7 சுருதியில் ஒவ்வொன்றும் மூன்று லயத்தில் ஒவ்வொரு சுருதியிலும் ஒவ்வொரு லயத்திலும் 7 வகை சுரங்கள் நாதமயமான உலகம். இந்த நாதமே இசையாக சொல்களில் மந்திரமாக நின்று எல்லாப் பொருள்களையும் எல்லா எழுத்துத்களையும் சொல்களையும் மந்திரங்களையும், சொல்மொழி உலகங்களையும் அக ஓசையால் உணர்த்துகின்றது. இத்தனை நாத வேறுபாடுகளையும் ஓசையால் கேட்கும் ஆற்றல் சிந்திக்கவும், இந்த நாத ஓசை ஒருவன் எழுப்பக் கூடிய ஆற்றல் சித்திக்கவும், செய்யும் ஓர் ஆற்றல், அக ஓசையாக



எம் உள்ளத்தில் இருந்து எழுந்து வருகின்றது. இதேபோல இந்த ஆற்றல் சித்திக்கும்போது இந்த நாதத்தில் மேற்கூறிய அனைத்தையும் துறந்து, அவற்றிலிருந்து விடுபட்டு தான் தன்னம் தனியாக இருக்கும் உணர்வு ஆற்றல் முக்தி சக்தி என அழைப்பர் இப்படி சித்தி முத்தி தரும் நாத சக்திகள் தோன்றி நின்று ஒடுங்கும் இடத்தை கணநாதம், மகாகணபதி, சித்தி விநாயகர் என அழைப்பர்.

எந்தப்பொருளை நினைத்தாலும் அந்தப்பொருளை எம் அகக்கண்ணுக்கு காட்டும் ஒரு ஒளி அகத்தே உண்டு. புறத்தே சூரியஒளி தன்னையும் காட்டி பிற பொருள்களையும் காட்டுவது போல இந்த அகஒளி 7 வகை அக உலகங்களையும் அந்த அக உலக 7 வகை கடல்களையும், மலைகளையும், நதிகளையும் உருவங்களையும் கண்டு காட்டி நிற்கும் இந்த அக ஒளிபோல அகநாதம் அகஓசை, அகசுவை, அகநாற்றம், அக ஊறு. இதனை பஞ்சஸ்கந்த ஒளிகள் என்பர். இந்த பஞ்சஸ்கந்த ஒளிகளுக்கும் மூல ஒளியாக திகழ்வது விந்து சக்தி இந்த விந்து சக்தி தோன்றிநின்று ஒடுங்கும் இடத்தை குகன், ஸ்கந்தன், சண்முகன், முருகன் என அழைப்பர். இப்படி ஓர் இடத்தில் இருந்து தன்னைத்தான் அறியும் யோகிக்கு 8 வகையான சித்திகள் வரும். நினைத்த இடத்தில் நினைத்த நேரத்தில் நிற்கவல்ல வகித்துவசித்தியும், இத்தனை தத்துவங்களையும், தெய்வவடிவங்களையும் கண்டு வணங்கி ஏழு வகை உடல்களையும் ஏழுவகை உலகங்களையும் கடந்து நிற்கும் எட்டுவகை சித்திகளும் சக்தி தரும் இந்த சக்தி தோன்றி நின்று ஒடுங்கும் இடத்தை சிவம் என்றும் அழைப்பர் புலவர்கள்.

இப்படித்திகழும் சிவம் ஆறுவகை எண்ண விருத்திகளால் ரிஷிதிகளையும் மந்திரங்களையும் தோற்றி அகில உயிர்களுக்கும் தன் முதல் குருவாக அமர்ந்து தவத்தினில் இருக்கும் தவயோகிகளுக்கு நான்மறை மந்திரங்கள் அனைத்தும் உபதேசித்து இத்தனை சக்திகளுக்கும் மூல சக்தியாக விளங்கும் தில்லை நடராஜமூர்த்தியின் உபசாங்களை சுட்டிக்காட்டி நிற்கும் இந்த சக்திகளை பராசக்தி என்னும் சக்திகள் தோன்றி நின்று ஒடுங்கும் இடத்தை பரசிவம் என்றும் அழைப்பர் ஆச்சாரியர்கள்.

இந்தப்பரசிவத்துடன் அத்துவிதமாக இணைந்த ஆன்மா அருள் பரஅவத்தைகளை அனுபவித்து மும்மலம் நீக்கிய நிலையில் சிதம்பர மூர்த்தியின் தாண்டவங்களை நேருக்கு நேர் கண்டு அவரின் குஞ்சித பாதத்தில் ஒடுங்கி பேரின்பம் அனுபவித்து மீண்டும் ஒடுங்கிய முறையே படிப்படியாக தியானத்தின்மூலம் பர உலகம், சட உலகம்

அருள் உலகம், வந்து பழையபடிதான் தியானம் செய்த இடம்.
வாழும்வீடு, மனைவி, மக்கள், சுற்றம், பதவி, காணி, பூமி அதிகாரம்
அனைத்தும்கொண்ட உலக வாழ்க்கைக்கு வருகின்றது என எடுத்துக்
கூறுவர் சிவயோகஞானிகள். எனவே ஆன்ம சாதகனால் காணப்படும்
பொருள்கள் அவன் அவன் பக்குவ நிலைக்கு ஏற்ப அமைகின்றது
என்பது புலனாகின்றது.

உண்மையை அறிய துணிந்த ஒருவனுக்கு பல சமயங்கள்
பல மத சாத்திரங்கள், தோத்திரங்கள், அறிவுகள் மதபேத உரைகள்
சாத்திர தத்துவஞான பேத தர்க்கங்கள், வாதாட்டங்கள் பட்டி
மண்டபங்கள் உதவுகின்றன.

ஓர் குறிப்பிட்ட மதபேதம் ஓர் குறிப்பிட்ட உண்மையை
மிகவும் தெளிவாக துல்யமாக தர்க்க அளவியல் பிரமாணங்களுக்கு
அமைய எடுத்துக்காட்ட முயல்கின்றது மற்ற உண்மைகளை இல்
லையன்றோ; அன்றி மறுத்ததாகவோ நாம் பொருள்கொள்ளக்கூடாது.

எனவே இந்த உலகத்தில் நாம் நேருக்குநேரே காணக்கூடிய
பொருள் போல கடவுளையும் அவரின் பற்பல வேடங்களையும்
தியானத்தின் வழி நின்றவர்கள் கண்டு இருக்கின்றார்கள். இப்படியே
மதபேத ஸ்தாபகர்களும் ஓர் குறிப்பிட்ட உண்மையை நேருக்குநேரே
கண்டு இருக்கின்றார்கள்.

எனவே இந்நூலின் 3 ஆம் அத்தியாயத்தில் நாம் நேருக்கு
நேரே காணக்கூடிய உலக பொருளாகிய நீரை தியானப்பொருளைக்
கொண்டு தியானத்தின்மூலம் 7 உலகங்களையும் 7 மலைகளையும்
7 நதிகளையும், 7 கடல்களையும் 7 வகைச் சரீரங்களையும், 7 வகை
ஆன்ம ரூபங்களையும் தியானத்தில் நிறுத்தி; வழிபாடு செய்தலையும்
சிவசின்னமாகிய விபூதி அணிதல் ஆகிய சாதனையில் இறைவனின்
7 வகை சிவரூபங்களையும் தியானத்தில் நிறுத்துவதை 11 ஆம்
அத்தியாயத்தில் சிவ சின்னமாகிய உருத்திராட்சம் அணிதல்
என்னும் சாதனையால் இறைவன் உலகத்தையும் உயிரையும் எம்
மையும் எப்படி தீய சக்திகளில் இருந்து பாதுகாக்கின்றார்; என்ப
தனையும், 12ம் அத்தியாயம் விளக்கி 13ம் அத்தியாயத்தில் அகண்ட
சக்தி தியானமும், 14ம் அத்தியாயத்தில் அக சக்திகள் பற்றிய
தியானமும், 15ம் அத்தியாயத்தில் உணவு பற்றிய தியானமும் 16 ம்
அத்தியாயத்தில் கடமைகள் பற்றிய தியானமும், 17 ம் அத்தியாயம்
நித்திரை பற்றிய தியானமும், 18 ம் அத்தியாயத்தில் இந்துசமய
சாத்திர ஒற்றுமையும், 19 ம் அத்தியாயத்தில் உலக சமய ஒற்றுமையும்



21ம் அத்தியாயத்தில் எண்ணும் எழுத்தும் என்ற அட்சரபதவியான
யோக தியானத்திற்கும் 22ம் அத்தியாயத்தில் தீட்சா பத்திர அட்
சரரியாய யோக தியானத்திற்கும்; 23 ம் அத்தியாயத்தில் ஒன்றே
உலகம் ஒருவனே தேவன் என்றும் 20 ம் அத்தியாயத்தில்
தீதிலா உலகம் காண்போம் என்றும் 24 ம்
அத்தியாயத்தில் சும்மா இரு சொல் அற என்று சந்நியாச யோகதி
யானமும் வாசித்து அறிந்துகொள்ள உங்களனைவரையும் ', கடவுளை
தியானிப்போம் வாருங்கள்'' என அன்புடன் அழைக்கின்றேன்.
இந்த நேரத்தில் என்னைச் சமய வழியில் நடத்திய என் குருநாதர்
களையும் தங்களுக்கு அறிமுகம் செய்கின்றேன். என்னை எனக்கு
அறிவித்த சுவாமி விவேகானந்தரின் நூல்களுக்கும் சமய தீட்சை
அளித்த இராமகிருஷ்ண மடாதிபதிக்கும்; கடவுளை காணலாம்
வருக! என என்னை தன் உபதேச மொழியினால் அழைத்து தியா
னத்தில் அருகிருத்தி; பற்பல சமய பெரியார்களின் கீதை உபநிடதங்
கள், பிரமசூத்திரம் முதலிய அறிவுகளைக் கற்றுக்கொடுத்து வேதாந்த
ஞானத்தை விருத்தி செய்த ஸ்ரீராமகிருஸ்ண சங்கத்தினருக்கும்;
நாளுக்குநாள் நேருக்குநேர் சைவ சமய சாத்திரதோத்திரங்களை
தர்க்கத்தின்மூலம் உணர்த்திய எனது மாமன்முறையான கொழும்புத்
தமிழ்ச்சங்க தலைவரும் இலங்கை கணக்காய்வாளருமான காலம்
சென்ற மு. வைரவப்பிள்ளை அவர்கட்கும் என்றென்றும் நன்றியு
டையேன். எனது சிறிய தந்தையாகிய ஆகில இலங்கை சைவப்புல
வர், சங்க ஸ்தாபக தலைவர், வித்தவான் சைவப்புலவர்
வ. செல்லையா அதிபர் மெய்கண்டான் வித்தியாசாலை இளவாலை
அவர்கள் சைவப்புலவர் சங்க மகாநாடுகளில் சொற்பொழிவுகள்
ஆற்றவும், ஆலயங்களில் கதா பிரசங்கங்கள் செய்யவும் நிகழ்ச்சிகளை
ஒழுங்கு செய்து 12 திருமுறைகளையும் மெய்கண்ட சாஸ்திரங்களை
யும் முறையாக கற்பித்து சைவ சித்தாந்த நெறியை
வளர்க்கவேண்டும் என ஆணையிட்டு சைவப்புலவர் பரீட்சையில்
சித்தி அடையச்செய்து என்னை ஆளாக்கிய அருட்செயலை நினைந்து
அவர் பாதங்களை போற்றுகின்றேன்.

சிறுபிள்ளையாக மண் அளைந்து விளையாடும் காலம் முதல்
தியானத்தின்மூலம் விண் அளந்து விளையாட பார்த்து பாராட்டி
வளர்த்து எடுத்த மகாத்மா அவர்கள். என் மீது அன்பு
கொண்டு சைவ சித்தாந்த உண்மைகளை உணரச்செய்த சிறுப்பிட்டி
சைவப்புலவர் செல்லத்துரை அவர்களை கனவிலும் மறக்க முடியாது.
அவர் எனக்கு மனமுவந்து அளித்த முப்பொருள் உண்மை அரிச்
சுவட்டை இந்த நூல் வாசிக்கும் அன்பர்களுக்கும் சமர்ப்பிக்கின்றேன்.
பஞ்சபூதங்கள் - நிலம், நீர், தீ, காற்று, வானம்

சடம் ] பஞ்சபுலன்கள் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
36 ] அறிவுக்கருவிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி
தத்துவ ] தொழிற்கருவிகள் - கை, கால், நா, மலவாசல், சலவாசல்
ங்கள் ] அந்தகரணங்கள் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம்
வித்தியாதத்துவங்கள் - பிரகிருதி, புருடன், கலை, காலம் நியதி, அரகம் விச்சை
சுத்ததத்துவங்கள் - சுத்தவித்தை ஈசுரம், சாதாக்கியம், சக்தி, சிவம்
] சக்திகள் - சரஸ்வதி, மகாலட்சுமி, கௌரி, மகேஸ்வரி,
] சதாசிவநாயகி, சித்திமுத்தி, பஞ்சஸ்கந்த சக்திகள்
அருள் ] வடிவங்கள் - பிரம்மா விஸ்ணு, உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவம், விநாயகர், முருகன், சக்தி, சிவம்.
பரம் - வேதநாயகன் 6 முகங்கள், ரிசிகள், மந்திரங்கள்
தெய்வம் - மேற்கூறிய சடம் அருள் பரம சக்திகளை இயக்குபவர் பஞ்ச கிருத்தியங்களைச் செய்யும் தில்லைத்தாண்டவ மூர்த்தி சிதம்பரநடராஜமூர்த்தி அவரே கடவுள். அவருக்கு மேல் ஒரு தெய்வம் இல்லை. திருநாவுக்கரசரே நீர் அறிவீர் ஆக.

மேற்கூறிய சட அருள் பர சக்திகளையும், தெய்வவடிவத்தையும் நீர் அகத்தேயும் புறத்தேயும் காண்பீராக வீண் விதண்டவாதம் புரிந்து மனம் நொந்து கவலைப்படவேண்டாம். இப்படி முப்பொருள் உண்மையை இடித்துரைத்து உபதேசம் செய்தவர். சிறுப்பிட்டி சைவப் புலவர் செல்லத்துரை அவர்கள். இவர் சைவப் புலவர் சங்க பரீட்சை காரியதரிசியாக இருந்து சங்கத்தலைவராகிய சைவப்புலவர் வித்துவான் வ. செல்லையாவுடனும் காரியதரிசி வேலணை சைவப்புலவர் மு. திருஞானசம்பந்த பிள்ளையுடனும் அயராது உழைத்து நூற்றுக்கணக்கான சைவப்புலவர்கள் மத்தியில் என்னையும் ஓர் சைவத்தமிழ் புலவன் ஆக்கினார். தமிழில் ஓர் நூல் எழுத ஆதார சக்திகளாக திகழ்ந்த மும்மூர்த்திகளை நான் மிகவும் நன்றிக் கடனுடன் போற்றுகின்றேன். வணங்குகின்றேன். தமிழும் சைவமும் இருக்கும்வரை இவர்கள் சேவையை தமிழ் உலகம் மறவாது, சைவ உலகம் மறவாது. சைவ உலகம் என்றும் அவர்களை கௌரவிக்கும் நிமிர்ந்தநன் நடை நேர்கொண்ட பார்வை நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறியில் இவர்கள் நிற்கின்றார்கள். தம்மைச் சேர்ந்தவர்களையும் உரிய அறிவூட்டி நிற்கச் செய்கின்றார்கள்.

சமய பண்பாட்டு முறைகளை அன்புடன் விளக்கி அருளிய மட்டுநகர் சைவப்புலவர். க. அருணாசலதேசிகரையும், சைவப்புலவர் கிருஸ்ணப்பிள்ளை அவர்களையும், சைவப்புலவர் சித்திவிநாயகம்



அவர்களையும் இத்தருணத்தில் எனது நினைவில் இருத்தி வணங்குகின்றேன். இயற்கை கவிஞரான புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை அவர்கள் நாளும் பொழுதும் நமக்கு பகவத்கீதையின் நுதலிய பொருட்களை விளக்கி கவிதைகளை கையாளும் முறைகளை கற்பித்தவர். நண்பனாக நல் ஆசிரியனாக எம்முடன் நாளுக்குநாள் உறவாடிய மகாத்மாவை நினைவில் நிறுத்துகின்றேன்.

இந்த இடத்தில் என் கலைத்துவத்தை படிப்படியாக வளர்த்து எடுத்த அகில இலங்கை வானொலி சமய நிகழ்ச்சித் தயாரிப்பாளர்களை பயபக்தியுடன் நினைவு கூருகின்றேன்.

உரும்பிராய் நடராசா அவர்கள் எனது ஆரம்பகுரு 5 நிமிடம் 10 நிமிடம் 15 நிமிடம் 25 நிமிடம் இதற்குள் தரமான நிகழ்ச்சிகளைத் தயாரிக்கவேண்டும். கேட்போர் உள்ளத்தில் கருத்துக்களை எழச்செய்ய வேண்டுமேயன்றி உமது கருத்தை வலிந்து திணிக்க கூடாது. ஆரம்ப உபதேசம் இதுவாகும். தமிழ்ச்சேவைப் பணிப்பாளர் நடராசா அவர்கள் எந்த நேரமும் உற்சாகம் ஊட்டுவார். முத்தமிழ் நடனம் இடும் அரங்கம் இது. உன் ஆக்கங்களை உடனுக்குடன் ஒலிபரப்புவோம் தொடர்க நற்பணி என்பர். தமிழ் சமய நிகழ்ச்சி தயாரிப்பாளர் பிரம்மஸ்ரீ ஹரிஹரசர்மா அவர்கள் ஆங்கிலம், வடமொழி, தமிழ்மொழி, இலக்கிய சாத்திர சமுத்திரம் சமய நிகழ்ச்சிகளை மந்திரபூர்வமாக அணுகுபவர். அவர்கள் சாதனைச்சுடர் நிகழ்ச்சிகளில் சமய அனுஸ்டான சமய சாதனை விடயங்களை பேசும்படி பணித்து சம்பிரதாய பூர்வமாக அடிஎடுத்துக்கொடுத்து நிகழ்ச்சி கருவூலங்களை தந்து என் அருகில் இருந்து நிகழ்ச்சிப்படைப்புக்களை திருத்தி அநேக நூல்களை என் உள்ளத்தில் இருந்து எழச் செய்து என் கலைத்துவத்தை வளர்த்தார். பலவேளைகளில் அப்பரும் ஞானசம்பந்தரும் இணைந்து சமயத் தொண்டாற்றிய நினைவுகள் என் மனதில் இருந்துதோன்றும் அப்படியான ஓர் அன்பு பிணைப்பு என்மீது அவர்கொண்ட அன்பு, கருணை சொல்லின் அடங்காது.

அன்பன் மதி அழகன் ஓர் நவீன புதுக்கவிதை கலைஞன். அவர் எந்த விடயத்தையும் குழந்தைகளும் புரியும் படியாக எடுத்துச் செல்லும்சொல் ஆற்றல் படைத்தவர். ஆற்று ஒழுங்குபோல் அழகாக ஆழமான விடயங்களை எடுத்து ஆளும் சொல்வண்ணம் கண்டு அவரைப்போல பேசவேண்டும் எழுதவேண்டும் என்று என் ஆவலைத் தூண்டியவர்.

கொம்பனித்தெரு சைவ முன்னேற்றச் சங்க காரியதரிசியாகவும், அருள்மிகு சிவசுப்பிரமணிய ஆலய தர்மகர்த்தா சபைக் காரியதரிசியுமாகிய அன்பர் பாலசுப்பிரமணியம் அவர்கள் கோயிலில் நடக்கும் சமய நிகழ்ச்சிகளிலும் சங்க நிகழ்ச்சிகளிலும், சமய சொற்பொழிவுகளிலும் கதாப்பிரசங்கங்களிலும் ஈடுபடுத்தி எனது பேச்சு ஆற்றலையும் நால்வர் நெறி என்னும் சஞ்சிகையின் ஆசிரியராக்கி எனது எழுத்து ஆற்றலையும் வளர்த்தவர். இதேபோல ஜெயந்தி நகர் அருள்மிகு சிவசுப்பிரமணிய கோயில் தர்மகர்த்தா கணபதியாபிள்ளை அவர்களும் ஆலயத்தில் ஞாயிறு தோறும் நடைபெறும் கூட்டுப்பிரார்த்தனைகளில் சமய சொற்பொழிவுகள் ஆற்ற ஒழுங்குகள் செய்து எனது சமய பிரசார சொற்பொழிவு ஆற்றல்களை வளர்த்தவர். இவர்கள் இருவரையும் மிகவும் பயபக்தியுடன் நினைவு கூறுகின்றேன்.

ஸ்ரீராமகிருஸ்ண ஆச்சிரம ஞாயிறு சமய பாடசாலையில் என்னையும் ஓர் ஆசிரியராக நியமித்து எனது சமய ஆசிரியர் தொழிலை நன்கு விருத்திசெய்த மதிப்புக்குரிய சுவாமி பிரேமானந்தா அவர்களின் பாதார விந்தங்களை மிகவும் பயபக்தியுடன் வணங்குகின்றேன்.

பாலர் பாடசாலை வாழ்வுமுதல் கல்லூரி வாழ்க்கை ஈறாக தம் அன்புக் கரத்தினால் அணைத்து தூய வாழ்வின் இரகசியத்தையும் தெய்வ நம்பிக்கையையும், சத்தியவேட்கையும், அருட்தாகத்தையும் இறைவனை இந்தப்பிறவியிலே அடையவேண்டும் என்ற ஆர்வத்தை யும் ஊட்டிய புனித அன்னையாரையும், தந்தையரையும், ஆயர்களையும் நினைவில் நிறுத்தி மகிழ்கின்றேன்.

ஸ்ரீராமகிருஷ்ணார் பண்மஸ்து
ஹரி ஓம் சாந்தி! ஓம் சாந்தி!! சாந்தி!!!





# 3. யாரும் காணலாம்

எமக்குமுன் காணப்படும் உடல்உயிர் சேர்க்கைகள் பல. உயிர் அற்ற பொருட்கள் பல. பழவகைகளைத்தரும் மரம்செடி கொடிகள், நவதானியங்களை அள்ளி வழங்கும் நெல் புல்பூண்டு வகைகள், அமுதமான பாலைத்தரும் பசுக்கள், ஆடுகள் ஒட்டகங்கள் பெற்றதாய் தன் முலைப்பாலினூடாக எம்மை வளர்த்தாள். எனவே நாம் எம் தாய்மையின் ஊடாக பெறும் உணவு பால், உலக ஜீவராசிகளின் உடலில் இருந்து தத்தமது பிள்ளைகளுக்கு மனம்முவந்து அன்பில் மலர்ந்து கருணையின் நினைவாக பாய்ந்து ஓடிவருவது பால். இந்த பால் அகில உலக தாய்மையினால் எழும் ஒற்றுமை உணர்வைத்தரும் தெய்வீக சின்னமாகும். அனைத்தும் பாற் கடல் மயமாக நாம் சிந்திக்கலாம். வாழ்க்கையின் ஆதார இருப்பிடம் அன்பின் மலர்ச்சி பாலாகி இந்தப் பாற்கடலால் வேறுபட்டுத் தெரிந்த உலகம் மறைந்து தூய்மையான அன்பு உலகம் உதயமாகின்றது.

இறைவன் தாய்மையினூடாக அனைத்து உயிர்களுக்கும் உணவு அளிக்கின்றார். தாய்மையினூடாக அன்பு, கருணை, தியாகம் தயை, தாட்சணியம் காட்டுகின்றார். எனவே தாயாக உடலை மறைத்து அகத்தே ஞான ஒளி கொடுத்து; அனைத்து உயிர்களும் தன் உடன் பிறப்பாக நினைத்து வாழ உதவிய இறைவனின் அருட் செயலை நினைந்து நினைந்து ஆனந்தம் கொள்கின்றார் மாணிக்க வாசகசுவாமிகள் திருவாசகத்தில்.

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து நீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி; உள்ஒளி பெருக்கி; உவப்பிலா ஆனந்தமாய
தேனினைச்சொரிந்து; புறம் புறம் திரிந்த செல்வமே சிவபெருமானே
யானுனைத்தொடர்ந்து; சிக்கெனப்பிடித்தேன். எங்கு எழுந்து
அருளுவது இனியே.

எனவே நாம் பாலை தெய்வீக சின்னமாக வைத்து தியானம் செய்வோமாயின் ''தாயிற் சிறந்த ஒரு கோயிலும் இல்லை'' என்ற முடிவுக்கு வருவோம். இறைவனில் அருளை முதன்முதலில் நாம் எம் தாயிடம் இருந்து பெறுகின்றோம். அதுபோல சகல ஜீவராசிகளும் பெறுகின்றன. தாய்மை அருளின் இருப்பிடம் ''பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிட பாற்கடல் ஈந்தபிரான்'' இறைவனாகும்.

தேவர் முதல் மனிதர் வரை உள்ள 18 வகைப் பிறப்புக்களுக்கும் பாற்கடல் பொது. பால் தயிராகி தயிர் நெய்யாகி பாற்கடல் தயிர்க்கடல், நெய்க்கடல் ஆகிய மூன்று கடல்களை நாம் தாய்மை என்ற தத்துவத்தினூடாகவும் சில மரங்களான தென்னை, சிறு பூண்டு ஆகிய எள்ளு நிலக்கடலை முதலிய தவாரங்களில் காணலாம்.

சுவைதரும் பழங்கள், தாவரங்களின் அருட்பிரசாதமாகும். மா, பலா, வில்வம், வாழை, நாவல் ஆல் இவை அமிர்தகடலின் பிரவாகம். எனவே அமிர்தமான கனியூட்டும் பழம்தரும் மரங்களையும் நாம் தாய்மையின் சின்னமாக சிந்திக்கலாம். இப்படி மலர்கள் மலர்களில் தேன் துளிகள், தேனீ, தேன்கூடு அமுதமான தேன்கடலை தருகின்றன.

எனவே நாம் மரங்களையும் செடிகொடிகளையும் தனித்தனியாகவும், கூட்டாகவும் பார்க்கும்போது அமிர்தமான தேன் சுரந்து பாய்ந்து ஓடிவரும் தேன் நதியை சுமக்கும் மலைகளாக அவற்றைப் பாவித்து அந்த மலைகளில் நதிகள் பாய்ந்து ஓடிவந்து அமிர்தமான தேன் கடலை உருவாக்குகின்றன எனவும் எமது சிந்தனையை வளர்த்துக் கொள்ளலாம்.

இதேபோல் நெய்கடல் இப்படியே பால்சுரந்து ஓடிவரும் நதிகளைச் சுமக்கும் மலைகளான தாய்மையை உணர்த்தும தாய் பசு, தேவமாதர்கள் காமதேனு, கார்த்திகை நட்சேத்திரங்கள் அனைத்திலும் பாற்கடல் தோன்றுவதையும் நாம் சிந்தித்து மகிழலாம். இப்படி எம்முன் காணப்பட்ட இந்த உலகம் பாற்கடல்மயமாக மாறுகின்றது.

உலகம் என்றோர் இடத்தில் இப்படி ஏழுவகை மலைகளில் ஏழு வகை முகில் கூட்டங்கள் படிந்து 7 வகை நதிகளாகி பாய்ந்து ஓடிவந்து ஏழுவகை கடல்களாகி ஒன்றுக்குள் ஒன்று கலந்து இந்த உடல் உயிர் வாழ்க்கையை தாங்குகின்றது.

இப்படி பால், தயிர், நெய், தேன், அமிர்தம், நன்னீர், உப்புநீர், பழச்சாறு என நாம் பிரித்து முகில்கள், மலைகள், நதிகள் வயல்கள் கடல்கள் என ஏழுவகைத் தியானம் செய்யும்பொழுது பயன்தரும் புற்கள் நெற்கள் பூண்டுகள், மரங்கள், செடிகொடிகள், பறவைகள், மிருகங்கள் மனிதர்கள் தேவர்கள் அனைத்தும் இயற்கைத் தன்மையினால் தாய்மையாக மாறி தெய்வீகமாக நினைக்க செய்து எமதுவணக்கத்தையும் நன்றிக்கடனையும் ஏற்கும் தெய்வத்தன்மையை பெறுகின்றன.



இப்படி எமக்கு ஒளிதரும் தீபங்கள், சூரியன், சந்திரன், நட்சத்திரங்களையும் சிந்திக்கலாம். இவை அனைத்தும் தத்தமது உரிய கடலில் எரிந்து கொண்டிருக்கும் தீபங்களேயாம் கண்ணுக்குப் புலப்படாத ஒளிகளைத் தருவன நவக்கிரகங்களும், அட்டதிக்கு பாலகர்களும் ஏனைய கோள்களும் ஒவ்வொரு ஒளியாலும் ஒவ்வொரு காட்சி வருகின்றது. தீபங்கள் தரும் காட்சிகள் ஒருவகை. நட்சத்திர ஒளிகளின் காட்சிகள் ஒருவகை, சந்திர ஒளிக் காட்சிகள் ஒருவகை சூரிய ஒளிக்காட்சிகள் ஒருவகை அட்டதிக்கு தேவதைகளின் ஒளி ஒருவகை நவக்கிரக ஒளிக் காட்சிகள் ஒருவகை இவ்வாறு சேர்வையாகவும் தனியாகவும் அமைந்து எண்ணங்களை கருத்துக்களை தோற்றுவிக்கும், ஒளிகள் பலவகை. இப்படி ஒளிகளினால் பல பல காட்சிகள் எம்முன் விரிகின்றன.

''நிறங்கள் ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த'' என மாணிக்கவாசக சுவாமிகள் சிவபுராணத்தில் இந்த ஒளிகளைச்சுட்டிக் காட்டினார்.

சூரியன் நெய்கடலிலும், சந்திரன் பாற்கடலிலும் நவக்கிரகங் தயிர்க்கடலிலும கோள்களும், யாகதீபங்களும் தேன் அமிழ்ந்த பழச்சாற்றுக்கடலிலும், உயிர்களின் இதயத்துடிப்பு நன்னீர்கடல்லும எரிந்துகொண்டு இருக்கும் தீபங்களேயாம். இந்த தீப ஒளிகள் எமக்கு காட்சிகளைக்கண்டு காட்டுகின்றன. இதனை உமாபதிசிவச்சாரியார் திருவருட்பயனில் சுட்டிக்காட்டும்போது.

''எங்கும் எவையும் எரியுறு நீர் போல ஏகம்
தங்கும் அவன்தானே தனி'' என்றார்.

எனவே ஏழுவகை உலகங்கள் ஏழுவகை மலைகள் ஏழுவகை முகில்கள்' ஏழுவகை நதிகள்' ஏழுவகை கடல்கள்' ஏழுவகைத் தீபங்கள் பதின் எட்டுவகைப் பிறப்புக்கள் என இந்தப்பிரபஞ்சகாட்சிகளை நாம் நம் தியானத்தில் இருத்தும் போது, அனைத்து அகபுற இயற்கைக்கும், மூல ஆதார சத்தி' தாய்மை மயமானது' தாய்மை வடிவானது, என நாம் நேருக்குநேரே காணலாம். உணரலாம்' அந்தத்தாய்மையுடன், பக்தி, கர்மம், ஞான, யோகங்களினால் இணைத்து சிறு குழந்தை போல வாழ்ந்து மகிழலாம்.

இந்த தாய்மைத்துவத்தை ''சர்வம் விஸ்ணு மயம்'' என வேதங்கள் துணிந்து கூறும் ''சர்வம் சக்தி மயம்'' எனப்பக்தர்கள் ஆடிப்பாடி மகிழ்வர்· தத்துவ ஞானிகள் இந்தச் சக்திமய பிரபஞ்சத்தில் தம்மை இழப்பர்

எந்தச் சக்தி, தன்னை ஏழு வகையாகப் பிரித்து, இந்தப் பிரபஞ்சத்தை இயக்குகின்றதோ? அந்தச் சக்தியை' நாம் தாய்மை வடிவத்தில் போற்றுவோம். வணங்குவோம். எம்மைத் தாய் அன்பில் இருத்துமாறு வேண்டுகோள் செய்வோம். தாய்மையை நினைவு படுத்தும், அத்தனை மரங்களையும் மிருகங்களையும் மனிதர்களையும், தேவர்களையும், தெய்வம், என மதித்தும பாதுகாத்தும்' வளர்த்து எடுத்துப் பயன்பெறுவோம,

எனவே நாம் நீராடும்போதும், இந்த மண்ணில் ஓடிவிளையாடி வேலைகள் செய்யும் போதும உணவு அருந்தும்போதும், ஏன்? கட்டிலில் படுத்து உறங்கும்போதும், எம்மைப்பெற்று, எடுத்த. தாயை நினைத்து, அந்த தாய்மையின் வடிவ தாவர சங்கம வடிவங்களை நினைத்து அந்த தாய்மை வடிவான இறைவனை நினைத்து எமது சாதாரண வாழ்க்கையை ஓர் தவவாழ்க்கையாக ஏன் மாற்றக் கூடாது? என நாம் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும்.

எனவே 84 நூறு ஆயிரம் யோனிபேதங்களில் வாழும் 18 பிறப்புக்களையும் ஒன்று இணைக்கும், தாய்மை, இயற்கையில், ஏழு வகை உலகங்களையும்,, ஏழுவகைத் தீவுகளையும், ஏழுவகை மலைகளையும், ஏழு வகை நதிகளையும், ஏழு வகைக் கடல்களையும, ஏழு வகைத் தீபங்களையும் நேருக்குநேரே கண்டு அந்த அந்த உடல்உயிர் சேர்கை' ஆகிய, ஆலயத்திலே தனித்தனி ஜீவன்கள், தத்தமக்கு உரிய, முலைகளினூடாக, உரிய பாலை அருந்தி, ஆனந்தம் கொள்ள, அதனை நேருக்குநேர் உணர்ந்து, அந்த முலைகளைத் தாங்கும், அக இயற்கைகளையும், புற இயற்கைகளையும், எவன் காண்கின்றானோ? அவனின் காட்சியே புனித காட்சி' என திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் ஓர் தேவாரத்தில் தருகின்றார்.

''உண்ணாமுலை உடையாளொடும் உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்தன அரவித்திரள் மழலை முழவு அதிரும்
அண்ணாமலை தொழுவார் வினைவழுவா வண்ணம் அறுமே''

எனவே தன்னைப்பெற்று எடுத்து தாலாட்டிச் சீராட்டி அன்புடன் வளர்த்த தாயை தியானப் பொருளாக்கி படிப்படியே தியான சிந்தனையை வளர்த்து உமாதேவியைத்தியானம் செய்ய வைத்து இறுதியில் சிவத்துடன் சேரும் நிலையை தருகின்றது. இது இயற்கை மலர்வு எனவே ''தாயிற்சிறந்த ஒரு கோயிலும் இல்லை'' என ஔவை மூதாட்டி பால்மணம் மாறாப் பருவத்தே எமக்கு சொல்லி வைத்தார்.



எனது அன்னை எனைப்பெற்றதுபோல்
உலக அன்னை உலகினைபெற்றாள்
எனது அன்னை எனை வளர்த்ததுபோல
உலக அன்னை உலகை வளர்க்கின்றாள்.

அகில உயிர்களும உடன் பிறப்பாக
அன்பும் கருணையும் ஆனந்தம் பொங்க
தன் உயிர்போல பிற உயிர் பேணும்
ஆத்மீக சாதனை ஓர் அரும்பெரும் பேறாம்.

இந்த அரும்பெரும் காட்சி அனைவர்க்கும் கிட்டவேண்டும். கண்திறந்து நாம் இந்த உலகத்தைப்பார்க்கும்போது கண்ணால் பார்க்கக்கூடிய அத்தனை பொருட்களும் தாய்மையினால் தோன்றி நின்று நீங்குகின்றன என தாயுமான சுவாமிகள் இந்த சாதாரண காட்சியை தெய்வீகமாக்கி ஓர் பாடலை நமக்குத்தந்துள்ளார்.

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன செயல் கொண்டிருப்பன முதல்
தேகம்கொள் அத்தனையும் மேகம்கொள் பௌதிகம்
ஜென்மித்த வாங்கு இறக்கும்
விரிவாய பூதங்கள் ஒன்றொடு ஒன்று அழியும்
மேல்கண்ட சேடம் இதுவே.

தியானத்தில் இன்னும் ஓர்படி மேலே செல்வோம்.

பிறந்த குழந்தை தானே தாயின் மடியில் பால் அருந்தும். ஆனால் அந்தக் குழந்தை கர்ப்பத்தில் இருக்கும்போது அதற்கு உணவு அளிப்பது யார்?

தாயின் வயிற்றில், தாயின் ஓர் அங்கமாக கர்ப்பத்தில் வாழ்ந்துவரும் குழந்தை. எந்தவிதமான சுயமுயற்சியும் இன்றி, அனைத்து வசதிகளையும் பெறுகின்றது. தாயின் இரத்தமே குழந்தையின் ரத்தம், தாயின் பிராணனே குழந்தையின் பிராணன், தாயின் நினைவே குழந்தையின் நினைவு இது ஓர் அதிசயமான வாழ்க்கை எம்மால் பின்நோக்கியும் பார்க்கமுடியாத ஓர் இருட்டு அறையாக இருக்கின்றது.

இங்கு தாயும் குழந்தையும் ஒன்று. இரண்டு அல்ல, என்ற அத்துவைதபாவனை, இதேபோல் இயற்கையைத்தவிர வேறு ஒரு

பொருள் இல்லை என்ற ஓர் தீர்மானித்த வாழ்க்கை எமக்கு அமைகின்றது.

பாருங்கள் தாயின் கர்ப்பத்தில் தாயோடு தாயாகச் சேர்ந்து வாழ்ந்து மண்ணில் பிறந்து குழந்தையாக வளர்ந்து வாழ்வதுபோல சகல ஜீவராசிகளும் பிறந்து வளர்கின்றன. குழந்தை வளர்ந்து படிப் படியாக அறிவுபெற்று சூரிய ஒளியால் புற இயற்கையும் அக ஒளியால் அக இயற்கையும் பார்க்கின்றது தனக்கு வேண்டிய உணவு பாதுகாப்பு ஆகியவற்றை தானே தேடிக்கொள்கின்றது. தாயின் கர்ப்பத்தில் ஒருவிதமான வாழ்க்கை தாயின் மடியில் ஒரு விதமான வாழ்க்கை சுயமாக மண்ணில் ஓடி விளையாடும்போது ஒருவிதமான வாழ்க்கை ஒன்றுக்கு ஒன்று வேறுபட்ட வாழ்க்கைகள்.

எனவே அருள்நிறைந்த காட்சிகளைப் பெறுவதற்குமுன் ஒருவிதமான வாழ்க்கை அருள் நிறைந்த காட்சிகளைப் பெற்றபின் வேறுவிதமான வாழ்க்கை. முன்னையது இயற்கையோடு இசைந்த வாழ்வு பின்னையது அருளோடு இசைந்தவாழ்வு.

எப்படியாயினும்; தாயின் கர்ப்பத்தில் இருந்து வளர்ந்த குழந்தை மண்மீது பிறந்து, வளர்ந்து, தாய் முலைப்பால் அருந்தி, கல்வியில் சிறந்து பின்தான் வந்த வழியைப் பின்நோக்கிப்பார்க்கின் றது. தன்னை வளர்த்து எடுத்த தாயையும் அந்த தாயின் பற்பல சேவைகளைக்கண்டு நயந்து எல்லா உடன் பிறப்புக்களும், தாய்மை யும் சிறப்புடன் வாழ வாழ்த்துவதும், அவை சிறந்துவளர அன்பு, கருணை, தியாகத்துடன உழைக்கும் ஊக்கம் நிறைந்த கடமையே சமய சாதனையாக மலர்கின்றது. ஓர் தனிமனிதனுக்கு மட்டும் இந்தச் சிந்தனை கிடைத்தால் போதாது சமூகத்தில் உள்ள அனை வரும் இந்த தெய்வீக சிந்தனை நிலைக்கு உயரவேண்டும். அப் பொழுதுதான் கொடுமையும், வறுமையும், பிணியும், நோயும் நிறைந்த சமூகம் அருள்நிறைந்த சமூகமாக மாறும்.

இதனை ஏற்படுத்த இந்து / சைவசமய ஆலயங்களில் கற்பிக் கப்படும் ஆரம்பப் பாடம் அபிசேகமாகும். நீர், இளநீர், பால், தேன், பஞ்சாமிர்தம், விபூதி, குங்குமம் முதலிய அபிசேகத் திரவி யங்களை தீர்த்தங்களினால் அபிசேகம் செய்து ஏழுவகை முகில்கள், ஏழுவகை மலைகள், ஏழுவகை நதிகள், ஏழுவகைக் கடல்கள், ஓர் இடத்தில் சக்கமிட்பதைக்காட்டி தாய்மையின் பெருமைகளையும்



உலகத்தில் நாம் காணவேண்டிய அருள் உலக காட்சிகளையும் இது தான் என அபிசேக சாதனைமூலம் காட்டுவர். தாய்மையின் சிறப் புக்களை எடுத்துக்காட்டும் ஆலயங்கள் வீட்டிலும், தெருவிலும், மரத்தடிகளிலும், ஊரிலும் நகரிலும் காணும் இடம் எல்லாம் பரந்து விரிந்து காணப்படும். எனவே தாயிற் சிறந்த ஒரு கோயிலும் இல்லை. அகில உயிர்களுக்கு அம்மை அப்பனாகத் திகழும் இறை வனையும் அவரின் குழந்தைகளாகிய அகில உயிர்களையும் அன்புடன் அணைத்துக் கருணை செய்யுங்கள். என்ற செய்திகளை பரப்பும் அபிசேக சேவையில் ஈடுபட்டு உழைக்கும் அந்தணர்களை வாழ்க என வாழ்த்துவோம். அபிசேக நன்னீரைத் தரும் கார்முகில்களை வாழ்க என வாழ்த்துவோம். இதமான அபிசேகதிரவியமாக சுரந்து அளிக்கும் பசுக்களை ஆ இனங்களை அன்புடன் வளர்ப்போம், மேய்ப்போம். ஆவினம் வாழ்க என மனமார வாழ்த்துவோம். மழை வாழ்க என வாழ்த்தி நன்றியுடன் நாமும் சுகமாக, இன்பமாக வாழ்வோம்.

அக இயற்கையும் புற இயற்கையையும் காவல்செய்யும் காவலர்களாகிய வேந்தர்கள் வாழ்க! புவிராஜாக்கள் வாழ்க. இந்த உண்மைகளை அனைவர்க்கும் எடுத்து ஓதும் நாவேந்தர்கள் வாழ்க. இவர்களின் முயற்சியால் இந்தப் பூமியில் காணப்படும் தீமைகள் அனைத்தும் நிங்குக. அனைத்திலும் தாய்மை உணர்ச்சி வெல்க, வளர்க தாய்மையின் சிறப்பு குணங்களாகிய அன்பு, கருணை, தயை, தியாகம், அமைதி, ஆனந்தம், தீமையில் வெறுப்பு நன்மையில் விருப்பு, அகப்புறத்தூய்மை இந்த உலகம் எல்லாம் பரவி, அனைத்து உயிர்களையும் ஒன்றாக, ஒன்றுடன் சேர்த்துக்கொள்க எனத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அனைத்தையும் வாழ்த்திக் காட்டுகின்றார், ஓர் தேவாரத்தில்.

''வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீரவே''

ஆலய அபிசேக தீர்த்தர்சனத்தால் மட்டும், இந்த தெய்வீக காட்சி ஏற்படவேண்டும் என்ற அவசியம் இல்லை. நாம் நீராடும்போதும், இளநீர். பால், பழச்சாறுகள், தேனீர் பருகும்போதும், உணவு உட்கொள்ளும்போதும், தாய்மையின் நினைவுகள் தோன்ற தெய்வீக அருட்காட்சி பெறலாம்.

நாம் அவசரம் அவசரமாக, எதுவித சிந்தனையும் இன்றி ஓர் இயந்திரம் போல ஓர் சூத்திரப்பாவைபோல இயங்குவதனால் தெய்வீக உணர்ச்சிகள் தோன்றுவதில்லை.

எனவே நாம் மண்ணில் வண்ணமாக வாழவேண்டுமானால் எமது செயல்கள் அனைத்தையும் திறப்பட சிந்தித்து திட்டமிட்டுச் செய்யவேண்டும். செய்கைகள் அனைத்தையும் தெய்வீகமாக சிந்தித்து மாற்றவேண்டும். நீராடும் போதும், உணவு அருந்தும்போதும் நித்திரைக்குப்போகும்போதும், நித்திரைவிட்டு எழும்பும்போதும் எமக்கு இத்தனை வசதிகளைச் செய்து தந்த சக்திகளுக்கு நன்றி செலுத்தவேண்டும். தாய்மையினூடாக தாய்மைக்கு ஆதார துணைவரான தந்தையை நினைத்து வாழ்தலே ஆத்மீக சாதனை என திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் ஓர் தேவாரத்தில் தருகின்றார்.

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின் நல்ல கதிக்கு யாதும் ஓர் குறையில்லை
கண்ணில் நல்லது உறும் கழுமலர் வளர்நகர்
பெண்ணில் நல்லாலொடும் பெருந்தகை இருந்தே.

திருவள்ளுவநாயனார் இந்த. உண்மைகளை பின்வரும் திருக்குறளில் சுட்டிக் காட்டுகின்றார்.

என்நன்றிகொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு''

அகரமுதல எழுத்து எல்லாம் ஆதி
பகவன் முதற்கே உலகு.

இப்படி அகில உயிர்களுக்கும் தாய்மையினூடாக அனுக்கிரகம் புரியும் தில்லைப்பெருமான் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகின்றார்.

பாலுக்குப்பாலகன் வேண்டி அழுதிட பாற்கடல் ஈந்த பிரான்
மாலுக்குச் சக்கரம் அன்று அருள் செய்தவன் மன்னிய தில்லை ன்னுள்
ஆலிக்கும் அந்தணர்கள் வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலமே இடமாக
பாலித்து நட்டம்பயில வல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

எனவே தாய்மையை தாங்கும் தந்தையையும் தம் உடன் பிறப்புக்களையும் யாரும் காணலாம். கண்ணின் பயனும் இதுவேயாம். காணப்படும் தந்தைதாயை வழிபாட்டு பொருளாகக்கொண்டு அவர்களினூடாக தெய்வத்திற்கும் வணக்கம் செலுத்தலாம் என்பதனை இந்த அத்தியாயத்தின்மூலம் தெரிந்துகொண்டோம்.

## 4. அறிவுக்கு எட்டிய தூரமே காட்சி

நாம் பிற நூல்களை கற்பதன்மூலம் அறிவு வருகின்றதா? அல்லது சுய அனுபவ காட்சிமூலம் அறிவு வருகின்றதா? என்பதை நாம் சிந்தித்துப் பார்த்தல் நன்று. நூல்களைப்படிப்பதன்மூலம் பிறர் தங்கள் சுய அனுபவத்தை எமக்கு அறிவிக்க நாம் அறிந்து கொள்கின்றோம். ஒருவர் தம் சொந்த அனுபவத்தை எடுத்துக்கூற நூல்கள் ஓர் சிறந்த ஊடகம். பிறர் தம் அனுபவங்களை நேரடியாக பேசினால் என்ன? அல்லது எழுத்து வடிவில் நூலாக தந்தால் என்ன அவை எமது சுய அனுபவத்துடன் சுயமான காட்சி அனுபவத்துடன் ஒத்து வராதபோது நாம் என்ன செய்வது? அந்த அறிவுகளையும் நூல்களையும் வெறும் கற்பனை எனத் தள்ளிவிடுகின்றோம். கற்பனை என நாம் தள்ளிவிட்டாலும், அவரின் சுய அனுபவத்திற்கு அந்த அறிவு உட்பட்ட காரணத்தால் அவர் அதனை கற்பனை என்று கருதுவது இல்லை.

எனவே காணுங்காட்சி, அதனால் நாம்பெறும் அறிவு, படிப் படியாக உயர்ந்து சென்று ஒரு நிலைக்கு அப்பால் செல்ல முடியாததாகி விடுகின்றது ஏதும் அறியாத நிலையில் இருந்து பூரண அறிவு பெற்ற ஓர் பேரறிஞன் உதயமாகின்றான்.

நாம் அறியாமையில் இருந்து இடர்பட்ட காலங்களைப்பின் னோக்கிப் பார்ப்பதும் சமய சாதனையாகும். நாம் தாயின் கர்ப் பத்தில் இருந்தோமே. மண்ணில் சிறு குழந்தையாக மண அழைந்து விளையாடினோமே. இந்த பேர் உறக்க நிலை நினைவு ஞாபகத் திற்கு வருகின்றதா? இப்படியான ஒரு நிலை மீண்டும் வரப்போகின் றது. என்றோ ஒருநாள் நாம் மரணப்படுக்கையில் படுக்கத்தான் போகின்றோம். கற்ற கல்வியும், பெற்ற செல்வமும், கட்டிய உறவும் பழகிய நண்பரும், பகைவரும் உணர்ந்த உணர்ச்சிகளும், பெற்றுக் கொண்ட அறிவுகளும், இந்த பேர் உறக்கநிலையில் பயன்படப் போவது இல்லை. இருந்தும் இல்லாததுபோல, அனைத்தையும் கடந்து, நிம்மதியாக பெரும் தூக்கம்கொள்வோம். இந்த அனுப வத்தை எமக்கு யாரும் நேராகவோ அன்றி நூல்வடிவாகவோ, சொல்லித்தரமுடியாது. நாம் சுய அனுபவத்தின் மூலம்தான் தெரிந்து கொள்ளவேண்டும்.

யார்? எம்மை அறிவற்ற நிலைகளில் இருந்து, படிப்படியாக தன்னை அறியும் நிலைக்கு உயர்த்துகின்றாளோ? அவளே தாய்.

அவளே காயத்திரி. யான் என்னை அறியாதபோது என்னை எனக்கு அறிவித்து, தன்னை எனக்குத் தந்து தனது அன்பினால், கருணையினால், தயையினால், தியாகத்தினால், என் அறிவைத்தூண்டி உரிய அவத்தையில் என்னை நிறுத்தி அந்த அந்த அவத்தைக்குரிய காட்சிகளை கண்டு காண்பித்தாளே அந்தத்தாயை, தாய்மையின் இருப்பிடத்தை, காயத்திரியை போற்றுவோம். வணங்குவோம அவளை வணங்கி வேண்டிய அறிவை கேட்டுப்பெற்றுக்கொள்வோம் இப்படி நாம் அறியும் நிலையில் இருந்து ஏதும் அறியாத நிலைக்கு உறக்கத்தில் ஒடுக்கும் தாயை தாய்மையை சாவித்திரி என போற்றுவோம். வணங்குவோம். அனைத்தையும் மறந்து பூரண உறக்கத்தில் ஆனந்தம் காண்போம்.

சரி நாம் வளர்ந்து விட்டோம். நிம்மதியாக கட்டிலில் உறங்குவோம். நாம் கற்ற கல்வி, பெற்ற அறிவு, உணர்ந்த உணர்ச்சி தேடிய உடமைகள் எங்கே மறைந்தன. நிம்மதியான நித்திரையில் இருந்து யார் எம்மைத்துயில் எழுப்பினார்கள்? துயில் எழுப்பி அனைத்தையும் காணும் உணர்ச்சி நிலைக்கு உயர்த்தி துயில் எழுப்பி என் அறிவைத்தூண்டி, அனைத்தையும் காணும்படி எம் அறிவைத் தூண்டியதோ? அந்த தாய்மையை நாம் போற்றுவோமாக, எம்முடன் இருந்து எமது புலன்களையும், அறிவுகளையும் காத்துக்கொள்ளும்படி, விண்ணப்பம் செய்வோமாக.

நாம் குழந்தையாக இருந்து, படிப்படியாக அறிவு பெற்று நம் சூழலை நாமே பார்க்கின்றோம். எத்தனை பொருட்கள் எத்தனை உடல் உயிர்சேர்க்கைகள் அவை நேரடியாக தம்மைத்தாம் எமக்கு அறிமுகம் செய்தனவா? அல்லது வேறு ஒருவர் அறிமுகம் செய்தாரா? ஒவ்வொருபொருளும் ஒவ்வொரு உயிரும், ஒவ்வொரு உருவும், உறவும் நேருக்குநேர் வந்து தம்மைத்தாமே அறிமுகம் செய்தன. தாய், தந்தை, சகோதர சகோதரிகள், மாமன், மாமி, அயல் வீட்டார், இப்படி பறவைகள், விலங்குகள், மரம்செடிகொடிகள், சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள், கடல் மலை, நதி காற்று, புயல் தென்றல் இவை தத்தமது குண இயல்புகளை, தம்மைப்பற்றிய அறிவை எமக்குத்தந்தன. இப்படி எந்த சக்திகள் என் கவனத்தைத்தம்பால் ஈர்த்து தம்மைப்பற்றி நான் அறிய என் அறிவைத் தூண்டினார்களோ? அந்த அகப்புறத்தாய்மையை நாம் போற்றுவோம். வணங்குவோம். எம் அறிவுக்கும் உணர்ச்சிக்கும் இனிமை தந்த அந்த அறிசுடர்களைப்போற்றுவோம். எம்முடன் அணைத்துக்கொள்வோம். அறிவுக்கடலே! அறிவுச் சுடரே! அன்பின் இருப்பிடமே! அருகில் வருக. என வாய்விட்டு அழைப்போம்.

குழந்தையின் நிலை, நல்லது கெட்டது தெரியாத நிலை ஆனால் தாயோ குழந்தை அழுதால் தானும் அழுவாள். குழந்தை மகிழ்ந்தால் தானும் மகிழ்வாள். குழந்தையும் தானும் ஒன்று என்ற அத்துவைத பாவனை.

நல்லது கெட்டது உணர்ந்த தந்தை வருகின்றார், நல்லது இது. கெட்டது இது எனத் தன் அதிகாரத்தால் உணர்த்துகின்றார். தாயும் ஒன்றும் அறியாதவள்போல குழந்தையின் நலன் கருதி தானும் தந்தையின் அதிகாரத்தில் இன்பதுன்பப்படுகின்றாள்.

இப்படி யார் யார் தத்தமது அதிகாரத்தினால் நல்லது கெட்டது இது என உணர்த்தினார்களோ, அந்த தந்தையை, பிதாத்துவத்தை, போற்றுவோம், வணங்குவோம், தீமையில் இருந்து விடுபட்டு, நன்மையில் வாழ்ந்து, அவரின் அன்புக்கு பாத்திரமாவோம். தீமையும் அழுக்கும் அசுத்தமும், துர்நாற்றமும் கேடும் குறைபாடுகளையும் கொண்ட வாழ்வில் இருந்து, சுத்தமும் நன்மையும் ஆக்கமும் நலனும் நிறைந்த வாழ்வுக்கு எழுந்து வருவோம்.

யார் என்மீது பெரும் கருணை கொண்டு, தமது செயல் பாட்டினால், என்னை அழுக்கு நிலையான அசத்தான வாழ்வில் இருந்து விடுவிக்க, சுத்தமான உண்மையான சத்திய வாழ்விற்கு அழைத்துச் சென்றாரோ, அந்த பிதாத்துவத்தை நாம் போற்றுவோம. வணங்குவோம். நன்றி கலந்த வணக்கங்களை அவர்கட்குச் செலுத்துவோம்.

யாரால் தான் இருட்டில் இருந்து, அதிகாரத்தின் நன்மைதீமை உணர்ந்து கஸ்டப்படமுடியும். வீட்டைவிட்டு வெளியேவருகின்றோம். தீபங்கள் வீட்டில் ஒளி தந்தன. ஆனால் வெட்டவெளியில் சூரியன் ஒளி தந்து, என் அழுக்கு நிலையை எனக்குக் காட்டி நீருடன் இணைத்து சுத்தம் செய்தது. சந்திரன் முழு நிலா ஒளி தந்தான். நட்சத்திரங்கள் ஒளி தந்தன. சூரியன் தன் ஒளியால் புற இருளை நீக்கி, தன்னையும் காட்டி எல்லாப்பொருள்களையும் காட்டி, இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ, வழி காட்டியது. எனவே, யார் யார் தத்தமது ஒளியால் என் அறிவைத்தூண்டி, காணப்படும் பொருள்களைக் கண்டு காட்டியதோ அந்த ஒளியை, ஒளிதரும் பொருட்களை போற்றுவோம். வணங்குவோம். வேண்டிய பொருள்களைக்கண்டு மகிழ்வோம். தாயின் தியாகத்தால் வந்த

சிறப்புக்களையும், தந்தையின் கடமையினால் வந்த சிறப்புகளையும் நயந்து நன்றிக்கடனை செலுத்தும் நாம், குருத்துவத்தைக் கண்டுகொள்ள முயல்வோம்.

கண்ணால் காணப்படும் பொருள்கள் அனைத்தும் எமது ஐம்புலன்களினால் உணரக் கூடியனவேயாம். அதனால் அந்தப் பொருளின் குண இயல்புகளை எமது புலநுகர்வின் அடிப்படையிலே வைத்துப்பேசுகின்றோம்.

ஓர் பொருளின் உருவத்தை சூரியனின் ஒளி காட்ட கண்ணால் காண்கின்றோம். காற்று அந்தப்பொருளை அதிரவைக்கும்போது அந்தப்பொருளின் ஒலியை காதால் கேட்கின்றோம். அந்தப்பொருள் எமது உடலில் வந்து மோதும்போது அதன் நிறையை நாம் உடலால் உணர்ந்து கொள்கின்றோம். அதுபோல அந்தப்பொருள் நீரில் கரைந்து நாக்கால் சுவைக்கின்றோம். அந்தப்பொருளை தூள் ஆக்கி மூக்கால் மணக்கின்றோம். இப்படி ஒரு பொருளில் குண இயல்பான வடிவத்தை உருவத்தை ஒளியின் நிறத்தால் கண்ணாலும், சுவையை நாவாலும் மணத்தை மூக்கால், ஒலியை காதாலும் நிறையைஉடல் உணர்வாலும் பெறுகின்றோம். எமது மெய். வாய், கண், மூக்கு என்ற எமது கருவிகளை சுவை, ஒளி, ஊறு, ஓசை' நாற்றம் என்ற ஐவகைக் குண இயல்பால் எந்த சக்தி எம் அறிவைத்தூண்டி அந்தப்பொருளின் குண இயல்பைக்கண்டு காட்டுகின்றதோ? அந்தச் சக்தியை, நாம் போற்றுவோம், வணங்குவோம். இருட்டில் இருந்த என்னையும் பிற பொருள்களையும், யார்; தம் ஒளியால் ஒளிரச்செய்து என் அறிவைத்தூண்டி, என் காட்சிக்கு அந்தப்பொருளைத், தந்தாரோ? எல்லா ஒளிகளுக்கு ஒளியாகிய,குருவை நாம் நன்றி உணர்வுடன் போற்றுவோம்அவரே எமது குருநாதன், எனப் புகழ்ந்து பாடுவோம்,

''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்கு
பொய்யா விளக்கே விளக்கு''

எனத் திருவள்ளுவ நாயனார் ஓர் திருக்குறளில் இந்த ஒளி வடிவான குருதேவனைப் புகழ்ந்து பாடினார். திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரும் ஓர் தேவாரத்தில் இந்த மூல ஒளியை புகழ்கின்றார்.

ஓதியாரும் அறிவார் இல்லை ஓதி உலகெலாம்
சோதியாய் நிறைத்தான் சுடர் சோதியுன் சோதியான்
வேதியாகி விண்ணாகி மண்ணோடெறி காற்றுமாய்
ஆதியாகி நின்றாறும் ஐயானுடை அண்ணலே.



யார்பொருள்களை அதிரவைத்து; அந்தப்பொருளின் ஒலி இயல்பைப் பெருக வைத்து, அந்தப் பொருளின், ஒலி இயல்பை அறிய என் அறிவைத் தூண்டினாரோ? அந்தச் சக்தியை நாம் போற்றுவோம், வணங்குவோம்.

எந்த நீர் பொருள்களைக் கரையச்செய்து, அந்த அந்த பொருளின் சுவையை என் நாவில் நீராக எழுந்து வந்து, என் சுவை அறிவை தூண்டியதோ? அந்த நீரின் மூலசக்தியைப் போற்றுவோம், வணங்குவோம்.

எந்த மெய்ப்பொருள் தன்னோடு பிற பொருள்களைச் சேர்த்து என் மூக்கில் அதே மெய்ப்பொருளாக எழுந்தருளி, அந்தப் பொருளின் மணத்தை, மணத்தை அறியும் அறிவைத் தூண்டியதோ? அந்த சக்தியை, அந்த குரு சக்தியை நாம் வணங்குவோம்.

எந்தப்பொருள் தானும் அசைந்து ஆடி, அனைத்தையும் ஆட்டி, எனையும் பிறபொருள்களையும் மோதவைத்து, அந்தந்த பொருள்களை உடல் உணர்ச்சியால் உணர்த்துகின்றாரோ? அந்த சக்தியை, குரு சக்தியை நாம் போற்றுவோம், வணங்குவோம். இப்படி கண்டு வணங்குகின்றார் திருநாவுக்கரசுநாயனார் ஒரு தேவாரத்தில்.

ஆட்டுவித்தார் யார் ஒருவர் ஆடாதாரோ, அடங்குவித்தால்
யார் ஒருவர் அடங்காதாரோ
ஓட்டுவித்தார் யார் ஒருவர் ஓடாதாரோ உருகுவித்தால்
யார் ஒருவர் உருகாதாரோ
பாட்டுவித்தால் யார் ஒருவர் பாடாதாரோ பணிவித்தால்
யார் ஒருவர் பணியாதாரோ
காட்டுவித்தால் யார் ஒருவர் காணாதாரோ காண்பார்
யார் கண்ணுதலான் காட்டாகலே.

ஒரே சூரியன் ஒளிதந்து தன்னையும் பிறபொருளைக் காட்டினாலும் எமது சுய அறிவுக்கு எட்டிய தூரமே காட்சியாகும், தூரம், காலம், நிறை, விருப்பு, வெறுப்பு முதலிய இயக்கங்கள் எமது ஆளுமை, ஆளுமை ஆற்றலில் எழும் முக்குணப் பண்பு. எமது வாழ்க்கைமுறை, கலை ஆற்றல் அனைத்துமாக காணப்படும் அக இயற்கையும், புற இயற்கையும், அனைத்துக்கும் ஆதாரமான ஓர் சக்தியால் தூண்டப்பெற்று, நடைபெறுகின்றன. எமது சுய அனுபவத்தை தரும் அந்த சக்தியை நன்றி உணர்வோடு வாழ்த்து

வோம், வணங்குவோம். எமது இயற்கைகளையும் உரிய நியம வாழ்வில் நிறுத்தி இயற்கையோடு இணைத்து இன்பம் காண்போம.

எனவே நிலமும் நீரும்' காற்றும், தீயும், வானும், நிலவும் சூரியனும் நட்சத்திரங்களும், கோள்களும், நவக்கிரகங்களும், தாயும் தந்தையும், பசுவும் வயலும், நெல்லும், நவதானியங்களும், தென்னையும், ஏனைய கற்பககருக்களும், மருந்து வகைகளைத்தரும் புல்பூண்டு மரம்செடி கொடிகளும், சுய அனுபவத்தை கற்றுத்தரும் இயற்கைக்குருமார்களாகும்.

இப்படி அனைத்து உடல்உயிர் சேர்க்கைகளையும் வாழவிட்டு இயற்கைநிதிப்படி ஒவ்வொருவரும் நின்று, தத்தமது உரிய கடமைகளை செய்யும் அனைவரும் கர்ம யோகத்தில் ஈடுபடுகின்றனர். தமது இயக்க அனுபவதினூடாக அனைத்து இயக்கங்களுக்கும் மூலாதார சக்தியை வியந்து இயற்கையில் அன்பு பக்தி செய்து, மனதில் எழும் ஆசை அவாவினை வைராக்கியத்தினால் அகற்றி, பேர் இயற்கையோடு, அசையாது உறுதியாக வாழும் சுய அனுபவ வாழ்க்கை நெறியே பக்தி யோகமாகும். இதனை திருவள்ளுவ நாயனார் ஓர் திருக்குறளில் விளக்குகின்றார்.

"ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்"

துன்பம் தரும்பொருளைவிட்டு நீங்கி இன்பம் தரும் பொருள்களை இணைத்து, சுய அனுபவத்தின்மூலம் அறிவு பெறுவதை ஞானயோகம் என்பர். இப்படி நாம் எம் சுயஅனுபவத்தின் அடிப்படையில் எமது கர்மங்களையும், உணர்ச்சிகளையும், அறிவுகளையும் எமது அறிவுக்கு எட்டியபடி வளர்த்துவந்தால், வாழ்வில் அமைதி, சாந்தம், ஆனந்தம் இன்பம், கிட்டும் வாழ்வும் ஓர் பயன் உள்ள செயல்போல பூரண திருப்திதரும்.

எந்த எந்தப்பொருள்கள் எமக்கு சுய அனுபவத்திலேயே துன்பம் தந்து தம்மைக் கனவிலும் நினைக்கவேண்டாம எனக்காட்டிய அத்தனை குருமாருக்கும் பிரிவு உபசாரம் செய்து அன்புடன் பகை ஏதும் இன்றி விட்டு விலகுவதே சந்நியாசம் எனப்படும். துன்பம் தரும் பொருளைவிட்டு விலகி, அதனை மீண்டும் தொடாது இருப்பதே வைராக்கியம் துறவு எனப்படும். எது எது இன்பம் தந்து தன்னைக் கனவிலும் பிரியவிடாது பந்திக்கின்றதோ? அந்த அந்த சக்திகளுக்கு வரவேற்புக்கூறி, போற்றிப் புகழ்ந்து உபசாரம் செய்வதே யோகம். எனவே துன்பம் தரும்பொருளைவிட்டு நீங்கி, இன்பம் தரும்பொருளை இணைபிரியாது இணைந்து இருப்பதே சந்நியாசயோகம் எனப்படும்.



சந்நியாசயோகம் பயில்பவர்க்கு ஓர் சிக்கலான சூழ்நிலை ஏற்படுகின்றது. இன்பமும் துன்பமும் அவர் அவர் மனோநிலையை பொறுத்தது. ஒருவர்க்கு இன்பம்தருவது மற்றவர்க்கு துன்பம் தருகின்றது. ஒரே மனிதனுக்கும் ஒருநேரம் இன்பம் கொடுத்தபொருள் மறுநேரம் துன்பமாகினறது. துன்பம் தரும் பொருளை விட்டு விலகி பின் அந்தப் பொருள் இல்லாமல் இருப்பதே பெரும் துன்பமாகின்றது. இன்பத்தில் சேர்ந்தும் துன்பத்தில் விலகியும், வாழும் வாழ்க்கை ஓர் ஊஞ்சல் ஆட்டம்போல அமைகின்றது. ஒருபொருள் என்றால் ஊசல் ஆட்டம். ஆனால் பல' பொருள். எனவே சூரியனைச்சுற்றி பூமியும், கோள்களும், சூழல்வதுபோல ஓர் வட்டமான வக்கர வாழ்க்கை. இப்படி ஓர் ஊசலாட்ட வக்கர வாழ்க்கையை கர்ம யோகம் என்றும் அந்த அந்த இன்ப துன்பங்களை நாம் இளிவரல் அழுகை, நகை, மருட்கை, பெருமிதம், வெகுளி உவகை என காட்டும் மெய்ப்பாடுகளையும் அன்பு, கருணை, தியாகம் தயை ஆனந்தம் முதலிய உணர்ச்சிகளையும் பக்தி யோகம் என அழைப்பர்.

இப்படி எந்த பொருளைக்கண்டாலும் அந்தப்பொருளில் சேராமலும், பிரியாமலும் அந்தப்பொருளின் சுயமான குணத்தைச் சாட்சியாக நின்று பார்த்து பொருளின் சுய அனுபவத்தை நடுநிலை நின்று அறிதல் சுய அனுபவத்தை ஆராய்ந்து பார்த்தலை ஞான யோகம் என்பர்.

எனவே சமய வாழ்க்கை என்றால் என்ன? எமது உலக வாழ்க்கை என்றால் என்ன? அவர் அவர் சுய அறிவுக்கு எட்டிய தூரமே காட்சி அந்த காட்சியின் வழியே அனுபவம் என நாம் துணிந்து நிற்கலாம்.

## 5. வாழ்க்கை என்பது போராட்டமா அல்லது பயணமா?

நாம் சற்று ஆழமாக சிந்தித்துப் பார்ப்போமானால் ஒருவிடயம் எமக்கு நன்றாக தெரியவரும். நாமாக ஒருபொருளைச் சேரவும் முடியாது சேர்ந்த பொருளைவிட்டு பிரியவும் முடியாது. இதனால், நாம் வெறுக்கும் பொருளை, விட்டுப்பிரியவும், விரும்பிய பொருளை அடையவும், முயற்சி எடுக்க வேண்டியுள்ளது, இதனால் எம்முடன் போட்டி போடுபவர்களோடு போராட்டம் செய்யவேண்டி நிலையில் இருக்கின்றோம்.

நாம் ஒரு தாயின் வயிற்றில் பிறந்தோம். அந்தக் கர்ப்பத்தில் நாமாகவே விரும்பிச் சேர்ந்தோமா? அல்லது அந்த கர்ப்பத்தில் நாம் விரும்பிய படி, நூறாண்டு காலம் வாழ முடியுமா? சரி. மண்ணில் பிறந்தோம். ஓர் அழகான தொட்டிலில், அம்மா தாலாட்ட, பால் அருந்தி நிம்மதியாக உறங்கி, காலம்கழித்தோம், அப்படி அந்த தொட்டிலில் நூறாண்டுகாலம் வாழ முடியுமா?

வளர்ந்துவிட்டோம். நல்லவசதியான் வீடு, மனைவி, மக்கள், இவை தொடர்ந்து நிலைக்குமா? எனவே பிறந்த நாள்முதல் இறக்கும் வரை நாம் விரும்பியோ, விரும்பாமலோ பயணம் செய்து கொண்டுதான் இருக்கின்றோம். வாழ்க்கை என்ற வாகனம். அந்த வாகனத்தில் நாம் செல்லும்போது பற்பல பொருள்களும் அறிவுகளும் பதவிகளும், கடமைகளும், நண்பர்களும், உறவினர்களும், பகைவர்களும், மாற்றார்களும், ஊர்களும், நாடுகளும், இன்னும் எத்தனை எத்தனையோ எண்ணங்களும் உணர்ச்சிகளும் சேர்ந்தும் பிரிந்தும் தொடர்ந்து செல்கின்றன. ஓடும் வாகனத்தை நம்மால் நிற்பாட்டும் சக்தியும், நம்மிடம் இல்லை. பிரியும் பொருள்களுக்கு பிரியா விடை கொடுப்பதைத்தவிர வேறு வழியும் நமக்கு தெரியாது. சேரும் உறவுகளுக்கு, விரும்பியோ, விரும்பாமலோ வரவேற்பு செய்யத்தான் வேண்டும். பிரியும் பொருளையோ அன்றி சேரும் உறவையோ தடுக்கும் சக்தி நம்மிடம் இல்லை. என்னே! வாழ்க்கையின் மர்மம்!! யார் என்னை இப்படி ஆட்டி என்னை திணறச் செய்கின்றார்? என ஔவை மூதாட்டி கவலைப்படுகின்றார்.

ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்
அன்றி அதுவரினும் வந்து எய்தும் – ஒன்றை
நினையாது வந்து முன் நிற்கிலும் நிற்கும்
எமையாளும் ஈசன் செயல்.



எனவே எனக்குப்பிரியமான பொருள்கள் என்னைவிட்டுப் பிரியும்போது தாங்க முடியாத துன்பம். இந்தத் துன்பத்தை மறக்க எந்த சக்தி தன்பெரும் கருணையினால் இவற்றை மறக்க செய்கின்றது? அந்த சக்தியை நாம் போற்றுவோம், வணங்குவோம்.

இன்பம் தரும் பொருள்களை, எந்த சக்தி தொடர்ந்து நினைக்கச்செய்து பிரிந்த அந்தப்பொருளை நினைவில் என்னுடன் இருப்பதுபோல காட்டி ஆறுதல், அமைதி தருகின்றதோ? அந்த சக்தியை போற்றுவோம். வணங்குவோம். எமக்கு வெறுப்பான பொருள்கள் உறவுகள் அருகில் சேர்ந்தபோது அந்தப்பொருளை விட்டுப் பிரியவேண்டும். அல்லது அந்தப் பொருளை எம் கண்ணுக்கு எட்டாத தூரத்தில் எறிய வேண்டும். அது என்னால் முடியுமா? எனவே எந்த சக்தி நான்வெறுக்கும் பொருளின் குண இயல்புகளை மறைத்து அந்தப்பொருள் என் அருகில் இருந்தபோதும், இல்லாதது போல மறைத்து எனக்கு ஆனந்தம், அமைதி தருகின்றதோ? அந்தச் சக்தியை போற்றுவோம் வணங்குவோம்.

இப்படி நம் கண்முன் வரும் பொருள்களை எமது சுய அனுபவத்திற்கு அருளும் சக்தியை நாம் போற்றுவோம். வணங்குவோம். இந்த கற்பகதருவை எம்முடன் என்றும் பிரியாது இருக்கும்படி வேண்டிக்கொள்வோம்.

வாழ விரும்பும் நமக்கு என்றோ ஒருநாள் சாவு வரும் என்று தெரியும். ஆனால் நாம் எங்கிருந்து வந்தோம்? எங்கே செல்கின்றோம்? என்பதுதான் அனைவருக்கும் புரியாத இருட்டு அறையாக இருக்கின்றது. அதனால் இந்த உலகத்தில் ஒருவனுக்கு ஏற்படக் கூடிய அதிக உச்சமான பயம் மரணபயமேயாம். எல்லா பயத்திற்கும் மூலமான பயம் மரணபயம். அதனால் வாழ்க்கை என்பது, மரணத்தை வெறுக்கும் ஓர் போர்க்களமாக மாறுகின்றது. அதனால் நாம் மற்றவனைப் பயமுறுத்துவதும் அப்படியேதான் உன்னைக் கொல்லுவேன் என்பதாகவே மற்றவர்களைப் பயமுறுத்துகின்றோம். இதுமட்டும் அல்ல உடல் இழப்பு மரணபயம்தருவது. இப்படி அறிவு உணர்ச்சி இழப்பும் பயம்தருவது. என்னசெய்வது இறந்தபின் உயிர் என்ன பாடுபடப்போகின்றது. என் அறிவு நிலைமை என் செல்வம் என்ன ஆகும். என் மனைவி மக்கள் என் செய்வார்கள். நாம் இந்த வாழ்க்கையில் பெறும் இன்பம் தொடர்ந்து நிலைக்குமா? இப்படி பயம் தொடர்ந்து செல்கின்றது.

எனவே எந்த சக்தி? என் உள்ளத்து இருந்து, இத்தனை துன்பத்தினையும் மறக்கச்செய்து பிரிந்துசெல்லும் அத்தனையும் தாங்கிக்கொள்ளவும், சேர்வன அத்தனையும் எதிர்கொண்டு வாழவும் என்னைத் தயார் செய்கின்றதோ? அந்த சக்தியை பணிவு அன்புடன் போற்றுவோம், வணங்குவோம். இந்த உள் உணர்வு ஆகிய ஆன்மீக சக்தியை நாம் போற்றுவோம், வணங்குவோம். எது பிரிந்தாலும், எதுசேர்ந்தாலும் என்னை நிலையான உணர்ச்சியில் நிற்கச் செய்து நிலையான இன்பத்தில் சேர்க்கும்படி விண்ணப்பம் செய்து அதனை அந்த சக்தியிடம் இருந்து பெற்றுக் கொள்வோம்.

வாழ்க்கை என்பதனை நாம் ஓர் பயணமாக கொண்டால் தாயின் கற்பத்தில் தோன்றி, அதனைப்பிரிந்து அவரின் மடியைப் பிரிந்து ஆடிய தொட்டிலைப்பிரிந்து, பஞ்சணைக் கட்டிலை விட்டுப் பிரிந்து, பெற்ற செல்வங்களைப்பிரிந்து, உற்றார் உறவினர்களைப் பிரிந்து கற்ற கல்வியைப்பிரிந்து உணர்ந்த உணர்ச்சிகளை ஏழுவகை உடம்புகளைப் பிரிந்து, எங்கே செல்லப்போகின்றோம்? போகும் இடம் தெரியாது. தவிப்பதற்குத் தான் வாழ்க்கையா? வாழ்க்கையில் நோக்கம் தான் என்ன? நோக்கம் இல்லாத வாழ்க்கை இறுதிவரை போராட்டம் தான்.

எனவே நாம் நம்மைப்படைத்த கடவுளிடம் போகின்றோம். அந்த கடவுள் தான் எனக்கு தஞ்சம். அவரே புகலிடம் என்று நாம் தீர்மானித்தால் அந்த கடவுளோடு நாம் நாளுக்கு நாள் பழகவேண்டாமா?

அப்படியாயின் அந்த கடவுளிடம் நாம் பேச வேண்டும். அவரைக்கண்டு தரிசித்து, உரையாடி, மகிழ வேண்டும்,

எனவே. நாம் எமக்குமுன் காணப்படும், பொருள்களை நாம் நன்றாக ஆராய வேண்டும். நம் கண்ணால் காணப்படும், காதால் கேட்கப்படும் மூக்கால் முகரப்படும் மனதால் சிந்திக்கப்படும் அனைத்து பொருள்களையும் அவர் கடந்து இருக்கின்றார். இத்தனை பொருள்களையும் கடந்து இருக்கும் கடவுளை அடைய என்ன? வழி அந்த வழியில் காணப்படும் சத்திகள் எவை? ஒவ்வொரு சத்தி நிலையிலும் காணப்படும் திசைகாட்டிகள் எவை? பாதையில காணப்படும் வேறு பொருள்கள் எவை? என நாம் தெரிந்துகொள்ள வேண்டும். நடுத்தெருவில் பாதைதெரியாது அங்கும் இங்கும் அலையக்கூடாது. எனவே நூல் அறிவு பயன்தரும் நல்ல சாதனமாகும்.



# 6. சொல் பொருள் உலகம்

நாம் கண்ணால் பார்த்த ஒருபொருளை, மற்றவர்களுக்கு அறிமுகம் செய்ய, அந்தப் பொருளின் சொல்லை உபயோகிக்கின்றோம். இதற்கு மொழி அவசியமாகின்றது. பேசப்படும் மொழிகள் 1000 எனவைத்துக் கொள்வோம். காணப்பட்ட ஒரு பொருளுக்கு, 1000 சொற்கள் எழுகின்றன. பால் என்பது ஒருபொருள். இந்தப் பால் என்ற சொல் உலகத்தில் எத்தனை மொழிகள் உண்டோ, அத்தனை சொற்களை உடையது. இப்படியே தாய்மை என்னும் சொல் காணப்படும் பொருள்கள் 1000 என்றால் இந்த ஆயிரம் பொருள்களை 1000 மொழிகளில் பேச எத்தனை சொற்கள் வேண்டும் என்பதனை நீங்களே கணக்கிட்டு பாருங்கள்.

ஒவ்வொரு பொருளுக்கும் செயலுக்கும் ஒவ்வொரு மொழியிலும் தனித்தனிச் சொற்கள் உண்டு. பொருள் பிரஞ்சம் ஒன்று, அந்தப்பொருள் பிரபஞ்சத்தை மொழிகளால் பேசும்போது கோடாகோடி சொற் பிரபஞ்சம் உண்டாகின்றது. எனவே நாம் எமது சமுகத்தில் எமது மொழி எமது மதம் எமது சொற்கோவை ஓர் குறிப்பிட்ட மந்திர வசதிகளுடன், பதி, பசு, பாசம் என்ற உண்மைகளைத் தெரிந்து வைத்திருக்கின்றோம். அதுபோல ஒவ்வொரு சமுகமும் தனது மொழி தனது மதம் என தெரிந்து வைத்திருக்கின்றது என்பதை நாம் ஆரம்ப அறிவாக தெரிந்து வைத்துக்கொண்டால் உலகத்தில் காணப்படும் சமய சண்டைகள் ஓர் அளவு குறைந்துவிடும். உலகம் சமாதான சக, வாழ்வில் நிலைத்து இருக்கும்.

எமது மொழியில் உள்ள அறிவை பிறமொழியில் மொழி பெயர்த்து பேசும்போது அந்த அறிவு மொழி பெயர்ப்பவனுடைய தயவில் இருக்கின்றது. அதனால் மொழி பெயர்ப்புக்களினால் தான் சமயபேதங்களும், தத்துவ பேதங்களும் எழுந்தன, என நாம் கருதுவது ஓர் நல்ல துணிகரமான செயலாகும், எமது மொழியையும் எமது சமயத்தையும் எமது மூதாதையர் எமக்கு உணர்த்தியவாறு அந்தசொல் அந்த பொருளைக் குறிக்கின்றதா என நாம் அறிந்து கொள்வது அவசியமாகும்.

எனவே நாம் ஓர் சமயத்தை அறிதற்கு அந்த சமயத்தில் எழுந்த மந்திரங்களைத் தெரிந்துகொள்ள, அந்த மந்திரங்களை

உண்டாக்கிய மனிதனின் மொழி எமக்கு கட்டாயமாக தெரிந்து இருக்கவேண்டும். இறைவன் ஒவ்வோர் உள்ளத்திலும் அக ஓசையாக அக ஒளியாக, உள்உணர்வாக அந்த அந்த சாதகனோடு உறவாடுகின்றார். அந்த சாதகன் தன் அனுபவத்தை, தான் தெரிந்து கொண்ட மொழிச் சொற்கோவையில் எடுத்து விளக்குகின்றார். கேட்போர் அவரின் அனுபவத்தைப் புரிந்து கொண்டார்கள் ஆனால் மொழி பெயர்ப்பாளனோ இவர் இதைத்தான் சொன்னார் என்று கேட்போருக்கு கருத்துக்களைத் திரிவுபடக் கூறிவிடுகின்றார். எனவே ஒருபொருளை காண்பதற்கு மொழி அவசியம் இல்லை. கண்ட பொருளை எடுத்து பேசுவதற்குத்தான் மொழி அவசியமாகின்றது.

எனவே நாம் நேருக்குநேரே கண்ட பொருளை அந்தப் பொருளின் இயல்பை மற்றவர்களுக்கு எடுத்து கூறுகின்றோம். அந்தப் பொருளைக் கண்டு அனுபவித்தவரும் கேட்டு அறிகின்றார். பார்த்து அறிவது ஒருவகை? கேட்டு அறிவது ஒருவகை, காணாத பொருளை கண்டவரிடம் கேட்டு அறியலாம். இப்படி நாலுபேர் கைவசப்பட்டு ஒருபொருள் ஐந்தாவது ஆளுக்குச்சென்றால் அந்தப்பொருள் என்ன என்ன விபரிதமாக மாறிவிடும் என்பதை நீங்களே உணர்ந்து கொள் ளுங்கள்.

எனவே யார் எழுத்தாலும், சொல்லாலும் என்னால் காணப்படாத ஒருபொருளை எனக்கு விபரித்து அந்தப்பொருளை என் கண்ணால் நேரில்கண்டு அறியுமாறு என் அறிவைத்தூண்டுகின் றாரோ? அந்த எழுத்து வடிவான நாத சக்தியை நாம் போற்று வோம். வணங்குவோம்.

நாம் ஒருபொருளை நேருக்குநேரே கண்டோம். கண்ட பொருளை மற்றவரிடம் காட்டி இதன் பெயர் என்ன? என வினா வினால் அவர் அந்தப்பொருளின் பெயரை அந்த மொழியில் கூறு வார். இப்போது கண்டபொருளை இதுதான் என எடுத்துச் சொல் வதற்கு அந்தச்சொல்லை சொல்லித்தந்தவர் போல உச்சரிக்கவேண் டும். எந்த நாதவடிவான சக்தி சொல்வோனிடத்து எழுந்துவந்து ஒளிவடிவான பொருளை விபரித்து பின் என்னுள் புகுந்து கண்ட பொருளை என் மனதில் விந்து வடிவாக எழுந்துவரச் செய்கின் றதோ? அந்த மந்திர சக்தியை நாம் போற்றுவோம் வணங்குவோம்.

இதைத் தேமதுரத்தமிழ் ஓசை உலகம் எல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும். என சுப்பிரமணிய பாரதியார் தான்



கண்ட காட்சிகளை சொல்வடிவாக எடுத்து பேசவும் தனது உரையை கேட்போர் மனதில் விந்து சக்தி எழுந்தருளி அந்தபொருளை காட்டு மாறும் விண்ணப்பம் செய்கின்றார் அருணகிரிநாதர் ஓர் திருப்புகழில்,

''நாதவிந்து கலாதி நமோநம;
வேத மந்திர சொருபா நாமோ நம;
ஞானபண்டித சுவாமி நமோ நம வெகு கோடி''

இந்த நாதம் 7 சுருதியில் 21 லயத்தில் 7 வகை சுரத்தில் எழும் இசையாகி, 18 மொழிகளாகி ஒவ்வொன்றும் 18 அவத்தை களில் வேறுபட்டு காணப்படும் பொருளை சுட்டிக் காட்டும் இசை, இயல் நாடக வடிவாகி ஒவ்வொரு களத்திலும் நவரச மெய் பாடுகளை எடுத்துக்காட்டும் நாத வெள்ளம், நாத நாதாந்த ஓசை ஓர் மொழியின் தனிச்சிறப்பு ஆகும்.

எனவே காணப்படும் ஓர் பொருளை எடுத்துப்பேச, பேசி யதைக்கேட்க எந்த நாத சக்தி பேசுவோனினதும் கேட்போனினதும் அறிவைத்தூண்டி, குருவையும் சீடனையும் அருகில் இருக்க செய் கின்றதோ? அந்த நாத சக்தியை, போற்றுவோம், வணங்குவோம். குருவையும் சீடனையும் இணைத்து வைக்குப்படி வேண்டுகோள் விடுப்போம்.

எந்த மொழியாயினும், தாய்மையையும், பிதாத்துவத்தை யும், குருத்துவத்தையும், தெய்வத்தையும் உணர்த்தும் சின்னங்களை யும், அந்தச் சின்னங்களை எடுத்துப்பேசும் மொழிச் சொத்துக்களை யும், நாத விந்து சக்திகள், கேட்போன் உளத்திலும், காண்போன் உள்ளத்திலும் எழுந்துவந்து இணைத்து வைத்தால் அன்றி உண்மை, கேட்போருக்கும், சொல்வோனுக்கும் புலப்படுவது இல்லை. எனவே நாதவிந்து கலாசக்திகளை எம் உள்ளத்தே எழுந்தருள பிராத்திப் போமாக.

# 7. சாதாரண பொருட்கள் தரும் தெய்வீகசிந்தனைகள்

தாய், பசு, பெண்கள் இறைவனின் பேரருட்கடலை நினைவு படுத்தும் தெய்வீக சின்னங்கள் ஆகும். முகில், மழை, நதி, மலை கடல், வயல் கங்காதீர்த்தத்தை நினைவுபடுத்தும் சிவ சின்னங்களாகும்.

நவதானியங்கள்: தேங்காய், கரும்பு, இளநீர், கருப்பம் சாற்றுக்கடலை நினைவுபடுத்தும் சிவ சின்னங்களாகும்.

மா, நாவல், பலா, ஆல், அரசு, வாழை, வெற்றிலை, பழச்சாற்றுக் கடலை நினைவு படுத்தும் சிவ சின்னங்களாகும்.

இத்தனை பொருள்களைக் கண்டவுடன் ஓர் பக்தனின் உள்ளத்தில் அக காட்சிகள் எழுந்து ஏழு வகை உலகங்களையும், ஏழு வகை தீவுகளையும், ஏழு வகை மலைகளையும், ஏழு வகை நதிகளையும், ஏழு வகைத் திணைகளையும், ஏழுவகை கடல்களையும், ஏழுவகை முகில்களையும், மனதில் நிறுத்தி காணப்படும் இந்த மாயா உலகம் நீங்க, அருள் உலகம் காட்சிச்குவரச் செய்கின்றது.

ஏழுவகை சரீரங்களில் ஏழுவகை உலகில் ஏழுவகை தீவுகளில், ஏழுவகை மலைகளில், ஏழுவகை முகில்களுடன், ஏழுவகை நதிகள் ஓடிவந்து இருதயமாகிய குளங்களில் நீர் சேர இறைவனும், இறைவியும் தாமரைமலர்போலவும் குமுதமலர் போலவும் திகழக்காண்பர். சிவ கங்கையில் தீர்த்தமாட தயாராக நிற்பர். இந்தத் தீர்த்தத் தரிசனமே நாம் நாளுக்குநாள் செய்துகொண்ட வினைகளை நீக்கும் புனித தீர்த்தங்கள் ஆகும் என திருமூலநாயனார் ஓர் திருமந்திரத்தில் தருகின்றார்.

உள்ளத்தின் உள்ளே உள பல தீர்த்தங்கள்
மெள்ளக்குடைத்து ஆடார்வினை கெட
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ளமனதிடை உள்ளம் உள்ளோரே.

எனவே நல்ல உள்ளம் படைத்த பெரியோர்கள் கண்ணால் காணப்படும் சாதாரண பொருட்கள் சிவ சின்னங்களாகத் திகழ, அவர்கள் நடமாடும் போதே இந்த சாதாரண வாழ்க்கையை, சிவாலயக் காட்சியாக மாற்றிவிட்டு, இறைவனை என்நேரமும் நினைத்து வாழ்கின்றார்கள்.

சூரியன் நெய்கடலில் நின்று எரிந்து கொண்டு இருக்கும் ஞான ஒளி வீசும் ஆதிப் பிரமத்தை நினைவுபடுத்தும், சிவ சின்னமாகும். சிவசூரிய நாராயணன் என அனைத்து உயிர்களுக்கும் தாயாகத்திகழும் தெய்வீக சக்திகளை குறிப்பது· இப்படி இந்த சூரியன், படிப்படியாக தியானம் செய்ய அருள்வடிவ 9 தெய்வ வடிவங்களின், கண்களையும், பரமவடிவத்தின் 6 முகங்களில் தோன்றும் 18 விளிகளையும், தில்லைத்தாண்டவமூர்த்தியின் அபயகரத்தையும் நினைவுபடுத்தும் சிவ சின்னமாகும்.

சந்திரன் பாற்கடலில் நின்று எரிந்துகொண்டு இருக்கும் அருள் ஒளித்தீபம் யோகப்பரப்பிரமத்தை நினைவுபடுத்தி சிவசின்னமாகிய 16 கலைகளுடன் திகழும் அத்துவாநெறிதனை அர்ச்சகர்களுக்கு நினைவுபடுத்துவது. அமாவாசை அஞ்ஞான இருளையும், முதலாம்பிறை மந்திர காட்சியும், இரண்டாம்பிறை அருட்காட்சியும் மூன்றாம்பிறை பரக்காட்சியும் நினைவுபடுத்த ஏனைய படிப்படியாக 6 அத்துவாக்களை குறிக்க ஏனைய அகச் சமயங்கள் ஆறினையும் குறிக்கும். இப்படி 1ம் பிறை தொடக்கம் பூரண நிலவுவரை இறைவனின் பற்பல வடிவங்களை நினைவு படுத்தி தியானம்செய்ய உதவுவது. யோகிகளுக்கு 6 ஆதார யோக சக்திகள் படிப்படியாக எழுந்து இறுதியில் சகஸ்கரத்திய அமிர்தக்கடலில் கலந்து இன்புறுவதைக்குறிப்பது. ஞானிக்கு 16 திரோதன சக்திகள் ஒவ்வொன்றும் படிப்படியாக நீங்குவதும் மீண்டும் அவை வந்துசேர்வதையும் குறிக்கும்.

புரோகிதர்களுச்கு பிதிர் உலக கடமைகளையும் நில உலக கடமைகளையும் இணைத்து புரோகிதம் செய்யும் திதிகளைக்குறிப்பது. இப்படி இந்து சமயத்தில் சந்திரனின் காட்சியில் வரும் நினைவுகள் சொல்லில் அடங்காது.

நட்சத்திரங்கள்: நெய்க்கடலில் நின்று எரியும் தீபங்களாக மந்திரங்களையும், மந்திர ஒலிகளையும், நினைவுபடுத்தும். ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு நட்சத்திரம் சிறப்பு ஆகும். இவை தில்லைத்தாண்டவமூர்த்தியின் திருமுடி எனத்திகழ்ந்து கோடா கோடி வேத மந்திரங்களின் இருப்பிடத்தை குறிப்பது.

தீபங்கள்: 36 தத்துவ ஞானங்களைக்குறிப்பது.

இப்படி இயற்கையில் காணும் முச்சுடர்களும் செயற்கையாக நாம் ஏத்தும் வீட்டுத் தீபங்கள் ஆலய தீபங்கள், திருவிளக்கு தீபங்கள் ஒவ்வொன்றும் தனித்தனி கருத்துக்களையும், எண்ணங்களையும் உடையன.

மரங்கள்: ஒவ்வொரு தெய்வத்திற்கும் அந்தந்த தெய்வத்திற்கு உரிய வேத புருட வடிவத்தை அந்த மரத்தாலும், இலைகளை மந்திரத்தாலும் குறிப்பிடுவது வழக்கமாகும். வில்வம்/பிலா சிவபெருமானின் வேத புருட வடிவத்தை குறிப்பது.

மா/நாவல்: முருகப்பெருமானின் வேதபுருட வடித்தைக்குறிப்பது.

கொன்றை மரம்: ஸ்ரீ உருத்திரரையு அவரின் வேதபுருட வடிவத்தையும் குறிப்பது.

அரசு; விநாயகப்பொருமானையும் அவரின் வேத புருட வடிவத்தையும் குறிப்பது.

ஏனைய மரங்கள் யாவும் பிரமதேவனின் வேத புருட வடிவத்தைக்குறிப்பது. ஆல் அரசு மகா விஸ்ணுவின் வேதபுருடவடிவத்தை குறிப்பன.

எனவே நால்வேத மந்திர புருடர்களைத் தியானிக்க முறையே மா, பலா, ஆல் அரசு முதலிய மரங்களைச் சிவ சின்னமாகக் கொள்வர். யாகாதி காரியங்களில் இலை சமித்துகளாக யாகமேடையில் எழுந்தருளுகின்றன.

பாம்பு: ஆன்மா யோக சாதனையால் படிப்படியாக தியானத்தின்மூலம் இறைவனின் வெவ்வேறு அங்கங்களில் சேர்ந்து யோகம் செய்வதைக்குறிக்கும்

பறவைகள்/விலங்குகள்; இறைவன் பிரதிநிதியாக நின்று இறந்த உயிர்களின் உடல்களை தம் உடலில் தகனம் செய்வதை நினைவுபடுத்தும். கோயில் சுடுகாடு. எனவே ஒவ்வொரு சமயத்தாரும் ஒவ்வொரு பறவையும் விலங்குகளையும் தத்தமது உடலை ஏற்க்கும் இறைவனின் பிரதிநிதியாக கொள்வர். எனவே பறவைகளும், விலங்குகளும் ஆன்மசாதகனுக்கு யாக்கை நிலைமையை உணர்த்தி இந்தசரீரம் விடுவதற்குமுன் முக்தி அடைய வேண்டும் என இறைபணியில் நிற்க உற்சாகமூட்டும் பொருள்களாகும்.



மனித தெய்வ வடிவங்கள்: ஒவ்வொரு மனிதனும் தான் வணங்கும் இஸ்ட தெய்வத்தின் வடிவத்தை வேடம்பூண்டு காட்டுவதால் இறைவனை நினைவு படுத்தும் சிவசின்னமாகும்.

ஆயுதங்கள்: சக்கரம், வேல், சூலம். ஒவ்வொரு தெய்வத்தின் கிரியா ஞானசக்திகளை நினைவுபடுத்துவது.

சிற்பங்கள்: ஏழு உலக மக்கள் தேவர் முதலியவர்களின் வடிவங்களை ஒளிமயமாக, சிற்பமாக, எடுத்துக் காட்டுவது.

எனவே இயற்கை பொருள்களையும் செயற்கை பொருள்களையும் ஆலயங்களிலும் ஏனைய இடங்களிலும் கண்டு இறைவனை நாம் தியானத்தில் இருத்தலாம்.



# 8. நூல் வழித் தியானம்

தமிழ்மொழி தன்னிடத்தே திருக்குறள், 12 திருமுறைகள் 14 மெய்கண்டசாத்திரங்களை உடையது. திருக்குறள் தமிழ்வேதத்தின் பாயிரமாக அமைய, 12 திருமுறைகள் தமிழ்வேதமாக அமைந்து, இருக்கின்றன. 14 மெய்கண்ட சாஸ்திரங்கள் தத்துவஞான நூல்களாக திகழ்கின்றன.

எந்தப்பொருளைக் கண்டாலும், அந்தப் பொருளைத்தாங்கும் சடசக்தியையும் அருட்சக்தியையும் பரசக்தியையும் கண்டு, அந்த முச்சக்திகளும் எழுந்து அருள் பாலிக்கும் இடத்தை கண்டு, அந்த இடத்தில், எம் உடல் பொருள் ஆவி மூன்றினையும், ஆகுதி செய்வோமாக. எனவே வேதாந்த அறிவின் முதிர்ச்சியை சுட்டிக் காட்டுகின்றார். திருவள்ளுவநாயனார் திருக்குறளில்.

பிறப்பு என்னும் பேதமை நீங்கச்
சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு.

சுய அனுபவத்தினால் வரும் அறிவு ஒருவகை. பிறர் அனுபவங்களை நூல்வழியே கற்று பெறும் அறிவு ஒருவகை என அறிவு நமக்கு இருதுறைகளில் இருந்து வருகின்றது. நூல் அறிவு எழுத்து வடிவில் எழுந்து வருவது. எனவே எந்த எழுத்து வடிவாகிய சக்தி, எமக்கு அகப்புற ஒளிகளைத்தந்து, எமது அறிவைத் தூண்டுகின்றதோ? அந்த சக்தியை, முதன்மையாகக்கொண்ட உலகம், காட்சிக்கு வருகின்றது. எனவே காணப்படும் இந்த உலகத்தை சிவ சின்னமாக கொண்டு, இந்த உலகத்தை நம் உயிருடன் சேர்த்துவைத்த இறைவனை நாம் வணங்குவோமாக. என்பதனை குறியும் நெறியுமாக உடையதே தமிழ்வேதம் என திருக்குறளின் பாயிரக்குறளாக அமைத்து இருக்கின்றார், திருவள்ளுவநாயனார்.

அகர முதல எழுத்து எல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு,

உலகில் உணவு தந்து, உணவு ஆகிய பாலினூடாக நெய்தந்து, நெய்க் கடலில் நின்று எரிந்துகொண்டு இருக்கும், ஒளிவிடும் சூரியனைத்தந்து, அனைத்தையும் தாய்மை வடிவில் இயக்கும்



இறைவனை, அகரத்தை முதலாகவும் யகரத்தை ஈறதாயும்கொண்டு விளங்கும் 12 சூரியர்களாக பிரணவம் கலந்து பஞ்சாட்சர வடிவாகவும் கண்டு, இந்த 12 ஆதித்தியர்களும் தோன்றி, நின்று, ஒடுங்கும், இடமாகிய தில்லைத்தாண்டவமூர்த்தியின் அபயகரத்தையும், இறுதியாக கண்டு தமது வாழ்க்கையை நடத்துவர் பெரியோர்கள். இந்த உலகம் முதல் தில்லைத் தாண்டவமூர்த்தியின் அபயகரம் வரையுள்ள வாழ்க்கையில் நாம் அடைய வேண்டிய இடம் அவரின் 'வ' அப்சரபதமாகிய குஞ்சிதபாதமேயாம்

ஆதிபகவன்' அனைத்துச் சூரியர்களுக்கும் மூல சூரியனாக திகழும் 'ய' அட்சர பதமாகிய அபயகரம் என ஐவகைச் சூரியர்களையும் சுட்டிககாட்டி நமசிவாய என்ற ஐவகைச் சூரியர்களாகிய 'ந' ஆகிய மஞசள் நிற அனல் ஏந்திய திருக்கர சூரியனையும் 'ம' ஆகிய வெண்ணிற ஊன்றிய திருப்பாத சூரியனையும் 'சி' ஆகிய நீல நிற உடுக்கு ஏந்திய கரச்சூரியனையும் 'ய' ஆகிய செந்நிற அபயகரச் சூரியனையும் சுட்டிக்காட்டி உபசாங்க ஐந்து சூரியர்களுடன் 7 உலக சூரியர்களையும் சுட்டிக்காட்டி அகரமுதல எழுத்து எல்லாம் ஆதிபகவன் முதற்கே உலகு என்றார் திருவள்ளுவநாயனார். இந்த ஒளிகள் பன்னிரண்டும் சமய அனுஸ்டான வழியில் ஒளி தந்து சாதகனுக்கு வழிகாட்டுவனவாகும். இப்படி 12 சூரியர்களின் ஒளிவழி செல்லும் தமிழ் கூறும் நல் உலகத்தில் தமிழ் சைவ உலகத்தில் 12 திருமுறைகளையும், ஆழ்வார்களின் திருப்பாசுரங்களையும், பஞ்ச புராணம் என ஓதி தியானம் செய்துவருவது வைதீக சமய மரபு ஆகும். இந்த தியானம் குரு சீடமுறையாக நூல் வழித்தியானமாக பரம்பரை பரம்பரையாக ஆதிகாலம்தொட்டு இன்றுவரை நிலவி வருகின்றது.

ஓதுவா மூர்த்திகள் பஞ்ச புராணத்தை உரிய பண்ணில் உரிய சங்கதிகள் நிறைந்த சொற்றொடர்களுடன் ஓதிக்காட்டுவார்கள். சீடர்களும் அதனை அப்படியே ஓதி தியானம்செய்து வழிபாட்டில் நிற்பார். இது நாதோபாசனையாகும். பண்டிதர்கள், புலவர்கள் ஆச்சாரியார்கள் பஞ்சபுராணப் பாசுரங்களை எழுதி பதச்சேதம் செய்து சொல் பொருள் விளக்கி பொழிப்புரையும், நயமும் சேர்ந்த விளக்கங்களால் அப்பாசுரங்களில் அமைந்த நுதலிய பொருட்களைக் காட்டி தியானம்செய்ய உதவுவர். இந்த தியானம் மௌனமாகவும் செய்யப்படும் அல்லது பொருள் உணர்ந்து பாடுதலாகவும் அமையும். சொற்பொழிவில் வசனநடையாலும் உரிய பண்ணுடன் பாடியும் பக்தர்களைத் தியானத்தில் நிறுத்துவர். கூட்டுப்பிரார்த்தனைகளாலும்,

தேவார திருவாசக இன்னிசைக் கச்சேரிகளினாலும் இந்த நூல்வழித் தியானம் செய்வது மரபு வழியாகும்.

இதேபோல ஆலய பூசைகளின்போதும் சிவாச்சாரியார் ஓதுவா மூர்த்திகளை பஞ்சபுராண ஆராதனை செய்யுமாறு வேண்டு கோள்விடுக்க ஓதுவா மூர்த்தியின் ஆராதனைகளுடன் பூசைகள் நிறைவு பெறுகின்றது. உரிய தெய்வத்தின் புராணங்களை குருமூர்த் தமாக அமர்ந்து ஒருவர்பாட மற்றவர் பயன்சொல்வார். இதனைக் கேட்டும் குருசீடமுறையில் புராண நூல் வழித்தியான மரபு வழியாக நடைபெறுகின்றது. புலவர்கள், ஆச்சாரியார்கள், ஆலய மூர்த்தயின் புராணங்களையும் தோத்திர சாத்திர பாசுரங்களையும் அடிப்படை யாக வைத்து கதாப்பிரசங்கம் சொற்பொழிவுகள் செய்வதும் அந்த அந்த தெய்வத்தின் புராணங்களை கலைஞர்கள் நாடகமாக நடித் துக் காட்டுவதும் தில்லைத்தாண்டவமூர்த்தியின் 108 வகைத் தாண் டவங்களை பரதநாட்டிய கலையினூடாக ஆடிக்காட்டுவதும், நூல் வழித் தியானமாகும். இப்படி தமிழ்மொழியில் இசை, இயல், நாடக முத்தமிழ் வழிபாடு ஆலயங்களிலும் மடங்களிலும் சங்கங்களி லும் நடைபெறுகின்றன.

பன்னிரு திருமுறைகளில் பஞ்சபுராணம் நூல்வழித் தியானம் என்ன என்ன கிரம முறையில் அமைகின்றது என்பதனை எடுத்துக் காட்டுவதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும். முதலாம், இரண் டாம், மூன்றாம் திருமுறைகளாக திருஞானசம்பந்தமூர்த்தி நாயனா ரின் தேவாரங்களும் நான்காம், ஐந்தாம் ஆறாம் திருமுறைகளாக திருநாவுக்கரசுநாயனார் தந்த தேவாரங்களும் ஏழாம திருமுறை சுந்தரமூர்த்திநாயனார் தேவாரமாக அமைய மாணிக்கவாசக சுவாமிகள் தந்த திருவாசகம் 8ம் திருமுறையாகவும திருவிசைப்பா திருப்பல்லாண்டு 9 (ஒன்பதாம்) திருமுறையாகவும் திருமூலநாயனார் தந்த திருமந்திரம் தமிழ் மூவாயிரம் பத்தாம் திருமுறையாகவும் காரைக்கால் அம்மையாா பாடிய மூத்த திருப்பதிகம் முதல் ஏனை யோர் பாடிய 40 தோத்திரத் தொகுதி நூல்கள் பதினொராம் திருமுறையாகவும் சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணம் பன்னிரெண்டாம் திருமுறையாகவும் அமைந்து இருக்கின்றது. இந்து சமயத்தின் உப சமயங்களான சைவ புராணங்களும், சாக்த புரா ணங்களும் விஸ்ணு புராணங்களும், கந்த புராணங்களும், விநாயக புராணங்களும் பிரம்ம புராணங்களும் நூல்வழித் தியான வரிசை களில் இடம்பெறுகின்றன.



இப்படியே ஆழ்வாரின் திருப்பாசுரங்கள் அனைத்தும் ஆழ் வார்களின் திரு அவதாரப் பாசுரங்களும் பஞ்சபுராண வரிசையில் அடங்கும். தேவார திருவாசக பதிக அமைப்பில் அனைத்து வைஸ் ணவ திருப்பாசுரங்களும் அமைந்து இருக்கின்றன.

இதிகாச இலக்கியங்கள் பஞ்சபுராணவரிசையில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை என்பது இங்கு குறிப்பிடத்தக்க ஒரு விடய மாகும். பஞ்சதோத்திரங்கள் எனப் பலராலும் பாடப்படுவது.

1) தேவாரம் 2) திருவாசகம் 3) திருவிசைப்பா
4) திருப்பல்லாண்டு 5) திருத்தொண்டர்புராணம்

ஆனால் அகச் சமயங்கள் ஆறும் சைவம், வைஸ்ணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்தியம், சௌரம். தத்தமது இஸ்ட மூர்த்திகளையும், தில்லைத்தாண்டவ மூர்த்தியுடன் இணைத்தே வழிபாடு செய்வர். எனவே பஞ்சபுராணம் என்பது.

1) தேவாரம் 2) திருவாசகம் 3) திருமந்திரம்
4) அந்த அந்த மூர்த்தியின் புராணக்காப்புச் செய்யுள்
5) அந்த மூர்த்தியின் புராணப்பாடலில்வரும் தியானப் பாசுரம் ஆகும்.

ஒவ்வொரு தேவாரப்பதிகத்திலும் அந்த அந்த மூர்த்திக்கு உரிய தேவாரமும், திருவாசகமும் திருமந்திரமும் பதிக அமைப்பில் அமைந்து இருக்கும் தன்மையை ஓர் பதிகத்திளை உதாரணமாக. கொள்ளலாம் ஒவ்வொரு பதிகத்திலும்.

முதலாம் தேவாரம் பிரம அம்சத்தையும்
இரண்டாம் தேவாரம் விஸ்ணு அம்சத்தையும்
மூன்றாம் தேவாரம் உருத்திர அம்சத்தையும்
நான்காம் தேவாரம் சக்தியையும்
ஐந்தாம் தேவாரம் சிவபெருமானையும்
ஆறாம் தேவாரம் விநாயகப்பெருமனையும்
ஏழாம் தேவாரம் முருகப்பெருமானையும்
எட்டாம் தேவாரம் இறைவனின் பரமவடிவத்தையும்
ஒன்பதாம் தேவாரம் இறைவனின் குரு சக்தி வடிவத்தையும்
பத்தாம் தேவாரம் சிதம்பரமூர்த்தியையும் குறிக்கும்.

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு உபசாங்க மூர்த்தத்தில் **சேர்த்து** பஞ்சபுராண நூல் வழித்தியானத்தையும் அமைக்கலாம். இந்தப் பாடல்களும் பதிக அமைப்பிலேயே அமைந்து இருக்கும் காரணத்தினால் திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் தேவார பதிக ஒழுங்கில் சேர்த்துக் கொள்ளலாம்.

வேதாகம முறைப்படி பஞ்சபுராணம் நூல்வழித் தியானம் அமைவதை நாம் கவனிப்போமாக.

1. பிரணவமுறை: ஓம்
தேவாரம் – பிரம்மா, திருவாசகம் – விஸ்ணு, புராணம் – உருத்திரர் இது யாக சாலையில் ஓதப்படுவது.

2. அர்ச்சனை முறை ஓம் சிவாய நம: சக்தி / சிவம்

| நான்குவேத புருஸர்கள் | வேதவாவிப்பிரிதுவி ஜலதேவதை | நான்குவேதபுருஸர்கள் | |
|---|---|---|---|
| 2 | 4 | 2 | = 8 |
| ஓம் | சிவாய | நம | |

1. பிரம்மா – திருஞானசம்பந்தர் தேவாரம்
2. விஸ்ணு – திருநாவுக்கரசர் தேவாரம்
3. மெய்பொருள் பிரிதுவி – சுந்தரமூர்த்திநாயனார்தேவாரம்
4. ஜலதேவதை – மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாசகம்
5. சக்தி – திருவிசைப்பா
6. சிவம் – திருப்பல்லாண்டு
7. முருகபுராணம்
8. விநாயகபுராணம்

இப்படி மூவர் தமிழும், திருவாசகமும், முனிமொழியும், புராணங்களும், அர்ச்சனை பஞ்சபுராண நூல்வழித் தியானமாக அமைகின்றது.

ஆலயங்களில் ஓதப்படும் கிரமமுறை அர்ச்சனை முறையிலே யாகும்.

### 3. சாத்திர தீட்சை முறை

மான் – தேவாரம்
மோகினி – திருவாசகம்
விந்து – திருவிசைப்பா



சக்தி - திருப்பல்லாண்டு
சிவம் – திருத்தொண்டர்புராணம்.
மடங்களில் ஆச்சிரமங்களில் இம்முறையிலே ஓதப்படுவது.

### 4. யோகசாதனமுறை — தடத்த சொரூபலட்சண ஒழுங்கும் சிவரூபம் சிவதர்சனம் சிவயோக முறையும்.

பிரம்மா – திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரம்
விஸ்ணு – திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்
உருத்திரர் – சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம்
மகேஸ்வரர் – மூத்த திருப்பதிகம் காரைக்காலம்மையார்
சதாசிவமூர்த்தி – திருவாசகம்
நாதம் – திருவிசைப்பா
விந்து - திருப்பல்லாண்டு
சக்தி – திருமந்திரம்
சிவம் – திருத்தொண்டர்புராணம்
சிதம்பரமூர்த்தி – திருவிளையாடல்புராணம்.

சிவயோக சாதனை புரிபவர் இந்த கிரமமுறையில் தியானம் செய்து நிற்பதை அட்டாங்க யோகத்தில் தியானம் என்றும் 'வ' அட்சரத்தில் நிலைத்துநிற்பது சமாதி எனவும் அழைக்கப்படும்.

### 5. திருத்தொண்டர் நூல்வழித் தியானமுறை

உலகம் – திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்
ஆதிதெய்வம் – திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்
அர்ச்சனை – சுந்தரமூர்த்திநாயனார்
குரு – திருவாசகம்
அருள் – திருவிசைப்பா
பரம் – திருப்பல்லாண்டு
உபசாங்கம் – திருமந்திரம்
சிதம்பரமூர்த்தி – புராணம்
இஸ்டதெய்வம் – திருப்புகழ்
உலகம் – அவையடக்கம்.

திருத்தொண்டர்களாகி இறைகடமைகளைச் செய்யும் புரோகிதர், அர்ச்சகர் அந்தணர்கள்' மறையவர், வேதியர் பார்ப்

பார், பண்டிதர், புலவர், ஆச்சாரியார், கலைஞர்கள் ஆகிய 10 படிகளில் நின்று இறைகடமை புரியும். திருத்தொண்டர்களின் நூல் வழித் தியான உதாரணத்தொகுதித் திருமுறைப் பாடல்களை, வாசகர்களின் வாசிப்புக்கு தருகின்றேன்.

உலகம்— திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்' அன்னம் காசு, இன்பதுன்பம் பிறப்பு வாழ்க்கை இறப்பு

அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்கும் மேலும் இப்புவி மிசை
என்னன் பாலிக்கும் மாறு கண்டின்புற
இன்னம் பாலிக்குமோ இப்பிறயே

உலக அதிதெய்வம் — சக்தியும் சிவமும் — திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் தேவாரம்.

கற்றாங்கெரி ஓம்பி கலியை வாராமே
செற்றார்வாழ் தில்லைச் சிற்றம்பலமேய
முற்றவெண் திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

அர்ச்சனை— சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்.

பித்தாபிறை சூடி பெருமானே அருள்ஆளா
எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணை தென்பால் வெண்ணை நால்லூர் அருள்துறையுள்
அத்தா உனக்கு ஆளாய் இனி, அல்லேன் எனலாமே.

குரு— மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம்

பால் நினைந்துட்டும் தாயிலும் சாலப் பரிந்து நீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் அருளுவது இனியே



அருள்— திருவிசைப்பா.

கற்றவர் விழுங்கும் கற்பக கனியை கரையிலா கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை மதிப்பவர் மனமணி விளக்கை
செற்றவர் புரங்கள் செற்றவெம் சிவனை திருவீழி மிழலை வீற்று இருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு உள்ளங்குளிர வென்கண் குளிர்ந்தனவே,

பரம்— திருப்பல்லாண்டு.

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்கு சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லைத் தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலமே இடமாக
பாலித்து நட்டம் பயில வல்லானுக்கேபல்லாண்டு கூறுதுமே.

உபசாங்கம்— திருமூலர் திருமந்திரம்.

பார்ப்பான் அகத்திலே பார்ப்பசு ஐந்துள
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத்திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய்ச் சொரியுமே

சிதம்பரமூர்த்தி'வ' அட்சரபதம் பெரியபுராணம் - சேக்கிழார்

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அறியவன்
நிலவு உலாவிய நீர் மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

இட்டமூர்தி — ஆவாகனத் — தியானம்.

முருகப்பொருமானை இஸ்டமூர்த்தியாக கொண்ட திருத்தொண்டன் எளில்

**அருணகிரிநாதர் திருப்புகழ்.**

நிலம்கொள் மேகத்தின் மயில்மீதே நீ வந்த வாழ்வைக்
கண்டு அதனாலே
மால்தங்கு பேதைக்குன் மணநாறும் மார்தங்கு தாரைதந்த
அருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண்டு எறிவோனே, வீரமகொள்
சூரர்க்கு உலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே நான் என்று மார்தட்டும்
பெருமானே

**உலக நிலைக்கு வருதல் — உலகம் கந்தர் அனுபூதி**

யாம் ஓதிய கல்வியும் மெய் அறிவும்
தாமே பெற வேலவர் தந்ததனால்
பூமேல் மயல் அறப்போய் மெய் புணர்வீர்.
நாமே நடவீர் நடவீர் இனியே

இப்படி மகாவிஸ்ணு சக்தி, சிவம், விநாயகர், பிரம்மா, வைரவமூர்த்தி முதலிய தெய்வங்களுக்கு உரிய அர்ச்சனை போற்றுதல் வணங்குதல், தோத்திரப் பாடல்களுடன் சமர்ப்பண பாடல் இறுதியாக பஞ்சபுராண நூல்வழித் தியானத்தை முடிக்கலாம்.

இங்கே அமைந்த 10 பஞ்சபுராண பாசுரங்களிலும் பால், நெய், என்ற பொருள்கள் இருப்பதைக் காணலாம். அன்னம், எரி ஓம்பி, வெண்ணை, பால், கற்பககனி, பாலுக்கு, பாற்பசு, நீர்மல்கி, வேலைப்பண்டு மெய் அறிவு எப்படி ஒரு பொருள் வெவ்வேறு தியானத்தின் படிகளைத்தாண்டி, ஓங்கி வளர்ந்து நிற்கின்றன என்பதை நாம் முதல் முதலில் தியானம் செய்வோம். இப்படி ஒரு தொகையான பஞ்சபுராணத்தை அவதானித்தால் வேறு வேறு பஞ்ச புராணத்தொகுதிகளை அமைக்க உதவியாக இருக்கும்.

அதுமட்டுமல்ல தெரிவு செய்யப்பட்ட பாசுரங்கள் முறையே உலகம். உலக அதிதெய்வம், அர்ச்சனை, குரு, அருள், பரம் உபசாங்கம், சிதமபரமூர்த்தி இஸ்டதெய்வம் இஸ்டதெய்வத்தின் ஒடுங்கி உடல்பொருள் ஆவிமூன்றும் அர்ப்பனம்செய்யும் அவையடக்கம் மேற்காட்டிய பஞ்சபுராணத் தொகுதியில் அமைந்து இருக்கின்றது.



மேற்கூறிய பஞ்சபுராணத் தொகுதிப் பாசுரங்களின் நூல்வழித் தியானத்தை வசன நடையில் எழுதி அதனை அறிய முயல்வோம். நூல் வழித் தியானம் :பால்: என்ற பதத்தில் இருந்து ஆரம்பமாகின்றது. இது வியாசர் பகவத்கீதை மூலம் காட்டிய நெறி. பகவத்கீதைத் தியான சுலோகத்தை ஆரம்பிக்கும்போது எல்லா உபநிடதங்கள் என்ற பசுக்களையும் ஆயன் ஆகிய கோபாலன் மேய்த்து நான்கு வேதம் ஆகிய முலைகளிலும் பால் கறந்து தனது கன்று ஆகிய அர்ச்சுனனுக்கு ஊட்டினார் இந்தப்பால் ஆகிய அமிர்தத்தை அருந்தியவர்கள் மிகவும் பாக்கியவான்கள். ஊமையும் வாய்திறந்து பேசும். ஓர் முடவனும் எழுந்து மலையைத் தாண்டுவான், மாதவன் கிருஸ்ணனின் அருள் அமுதம் பருகியவர்கள் பரமானந்த யோகிகளாகி ஜகத்குரு நிலையை அடைவார்கள். சேக்கிழார் பெருமானும் பால் என்ற பதத்தில் இருந்துதான் திருதொண்டர் புராணத்தை தொடங்குகின்றார்.

தோணியப்பர் கோவிலில் குழந்தை அம்மே! அப்பா!என அழுதது உமாதேவியார் திருமுலைப்பால் சுரந்து அளித்தார். குழந்தை பருகியது. பெற்ற ஞானத்தை சேக்கிழார் பெருமான் அழகுபட காட்டுகிறார்.

சிவனடியே சிந்திக்கும் திருபெருகு சிவஞானம்
பவம் அதனை அறமாக்கும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம் அடைந்தார் அந்நிலையில்.

இந்த நால்வகை ஞானம் உடைய திருஞானம்பசந்தமூர்த்தி நாயனாரைத் தலைவராகக் கொண்டு நாம் திருத்தொண்டு செய்கின்றோம் என்பதனைச்.

வேத நெறி தளைத்து ஓங்க மிது சைவத்துறை விளங்க
பூதபரம்பரை பொலிய புனித வாய் மலர்ந்து அழுத
சீதவளவயற்புகலிக திருஞானசம்பந்தன்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

என்றார் சேக்கிழார் பெருமான்.

ஏழுவகைத் தீர்த்தங்களினாலும் உயிர்களுக்கு உணவு அளித்து மும்மலம் நீக்கி முக்தி இன்பத்தில் சேர்க்கின்றார் சிவபெருமான்.

அவர் தந்த அருட்பிரசாதமான உணவின் இருப்பிடத்தை தியானிப்போம் ஆயின் உணவுமயமான ஏழுவகை தீர்த்தங்களையும் பரிபாலிப்பவர் தில்லையில் திருநடனம் புரியும் சிவபெருமான் எனச் சுட்டிக் காட்டி தேவாரத்தை ஆரம்பிக்கின்றார் திருநாவுக்கரசுநாயனார்.

அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற்றம்பலம்

அன்னமய காட்சியை எப்படிப்பெறுவது என்ற சொல்லிற்கு பிரமதேவரின் வாகனமாகிய அன்னப்பறவையின் விவேகம் எமக்கு வேண்டும் என அன்னப்பட்சியின் ஆற்றலைச் சுட்டிக்காட்டி பாலும் நீரும் கலந்துவைத்தால் அன்னம் நீரை அகற்றி பாலை மட்டுமே அருந்தும். அதுபோல எம்முன் காணப்படும் வேறுபட்ட இந்த உலகத்தில் மாயா உலகத்தில் மாயை கடந்து அருள்மயமான உணவைக்கண்டு அந்த உணவு ஏழுவகை தீர்த்தமாக அமைவது கண்டு அருள்வழி செல்ல நூல்வழித் தியானத்தில் நிற்க எம்மை நாம் தயார் செய்துகொள்ளவேண்டும்.

அன்னம்பாலிக்கும் தில்லைச்சிற்றம்பலம்

இந்த உணவு ஆகிய ஞானப்பாலை கங்கா தீர்த்தத்தை இறைவன் என்ன அடிப்படையில் எமது அனுபவத்திற்குத் தருகின்றார் என நாம் சிந்தித்துப் பார்ப்போம். காசு எப்படி உருவாகின்றது. அதன் தொழிற்பாடு என்ன? பணம் என்ற சக்கரம் சுழல என்ன என்ன தொழில்முயற்சிகள் நடைபெறுகின்றன. எனச் சிந்தித்துப்பார்ப்போமா?

அரசன் பொன்னில் கடதாசியில் தன் முத்திரையைப் பதித்து இது பணமாக இருக்கட்டும் என ஆணையிடுகின்றான். அது பணமாக சுழல்கின்றது. உற்பத்தியில் சேர்ந்து உழைத்தவர்கள் அனைவருக்கும் பணம் ஊதியமாகின்றது. ஊதியமாகப் பெற்ற பணத்தை வைத்து உழைத்தவன் தனக்கு வேண்டிய பொருள்களை விலைக்கு வாங்குகின்றான்.

இப்படிப் பணத்தால் உணவு, உடை, பாதுகாப்பு கொடுக்கின்றார்.

பொன்னம்பாலிக்கும் மேலும் இப்புவி மிசை.

எனவே உழைக்காமல் இருந்து நுகரவேண்டுமாயின் பணத்தை சேமிக்கவேண்டும். சேமித்தபணம் செலவானபின்பு மீண்டும் உழைக்கவேண்டும்.



பணம் இல்லாவிட்டால் வாழ்வு துன்பம் பணம் இருந்தால் இன்பம். உடல் உழைப்பு அவசியம். எனவே நோய் இல்லாத வாழ்வே பெரும்செல்வம். எமது வாழ்க்கை என்னும் உழைப்புக்கு ஊதியம் பாவம் புண்ணியம். இந்த கர்மபலன்களை இறைவன் தன் ஆணை பதிந்த யந்திரத்தை ஒவ்வொரு ஆன்மாக்கும் மாயா இயந்திர தநுவாக இந்தச் சரீரத்தை தந்து உலகில் வாழவிட்டார். எனவே பிரம்ம உருவில் நின்று, பால் முதலிய ஏழுவகை தீர்த்தங்களை, உணவாக அளித்த அதே தில்லைத்தாண்டவமூர்த்தி, பொன், பணம், என்ற சக்கரத்தை வாகனமாக கொண்டு அனைத்து உயிர்களையும் பாதுகாக்கும் மகாவிஸ்ணுமூர்த்தியாகவும் திகழ்கின்றார்.

அன்னம்பாலிக்கும் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்கும் மேலும் இப்புவிமிசை.

இப்படி உரிய காலத்தின்பின் அளித்த மாயா இயந்திர தநுவை, அவர் உருத்திராக நின்று மீண்டும் தன்னிடம் எடுத்துக் கொள்ளப் போகின்றார். எனவே பிறப்பு வாழ்வு இறப்பு என்ற நிகழ்ச்சியிலே இன்பதுன்பப்பட்டு உழலும் நாம், புண்ணியவழி நின்று சிவபெருமானின் அன்புக்குப் பாத்திரமாகி, கர்மம் பக்தி, ஞான சேவையில், அயராது உழைத்துப் புண்ணிய பயன் ஆகிய காசைப் பெற்று, நல்ல உணவுகளை உண்டு' வீட்டில் வாழ்ந்து, நிம்மதியாக உறங்குவோமாக என உலக வாழ்க்கை நிகழ்ச்சிகளை எம் மனதில் நிறுத்தி நூல் வழித் தியானத்தை, இந்த தேவாரத்தில் ஆரம்பிக்கின்றார் திருநாவுக்கரசுநாயனார்

அன்னம்பாலிக்கும் தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்கும் மேலும் இப்புவிமிசை
என்னன் பாலிக்கு மாறு காண்டின்புற
இன்னம்பாலிக்குமோ இப்பிறவியே.

உலகத்தில் எவரும் கண்ணால் காணக்கூடிய பொருட்கள் உணவு உடை பாதுகாப்பு வீடு, இதனைப்பெற காசு, பொன், இந்த அடிப்படையில் வரும் இன்பதுன்பம் வாழ்க்கையில் பிறப்பு இறப்பு இப்படி வளரும் உறவுகளே சந்ததி விருத்தி என்பன.

இந்த உலகத்தின் அதிதெய்வமாக திகழும் இறைவனாகிய சக்தி சிவத்தை காணவிடாது தடுக்கும் ஒருபொருள் உண்டு அது

தான் தோசம். கலியுகத்தில் வாழும் அனைவருக்கும் ஓர் வியாதி ஜலத்தினால் ஜலதோசம் வருவதுபோல கல்வி அறிவு இல்லாதவர் களுக்கு வருவது சனிதோசம். காம, மோக, குரோதலோப, மத மாச்சரிய முதலிய சனிதோசத்தை கல்வியினால் நீககவேண்டும். இல்லையனில் சனிதோசம் பிடிக்கும். நாம் பாவச்செயலில் ஈடுபடுவோம்,

பாவத்தின் பயன் எம்மைப் பற்றிப்பிடிக்கும். அதனால் உலகத்திற்கு அதிதெய்வமாக இருக்கும். கடவுளை காணமாட்டோம் கடவுளைத் தியானம் செய்யவும் மாட்டோம். எனவே கண்ணுடை யோர் என்பர் கற்றோர். மற்றவர்கள் சனிதோசத்தினால் கண்ணி ருந்தும் குருடர்களேயாவர். அவர்கள் பாவம் செய்து வாழ்வில் துன்பப்படுவர்.

| | | |
|---|---|---|
| கற்றவர்கள் | - | 10 விடயங்களை தம் குருவிடம் இருந்து கற்றுக் கொண்டார்கள் |
| முதலாவது | - | எந்த நிலையிலும் அறிவு விவேகத்தை விருத்தி செய்தல் |
| இரண்டாவது | - | தர்மவழிநின்று வேதவிதிப்படி வாழ்ந்து வாழ்க்கையை யாகமாக மாற்றுதல் |
| மூன்றாவது | - | உரிய இடத்தில் உடல் பொருள் ஆவிமூன்றையும் தியாகம் செய்ய சித்தமாய் இருத்தல். |
| நான்காவது | - | யாகச்சுடரில் பிரம்மா, விஸ்ணு, உருத்திரன் மகேஸ்வரர் சதாசிவம் ஆகிய பஞ்ச மூர்த்தி களை எழுந்தருளச் செய்து வழிபடுதல். |
| ஐந்தாவது | - | சிவவழிபாடு செய்யாவிட்டால் சனிதோசம் பிடிக்கும். அதனால் புண்ணிய கர்ம பயன்களையும் அனுபவிக்க முடியாது என, ஆழமாக நினைவில் வைத்திருத்தல். |
| ஆறாவது | - | யாகத்தில் மும்மூர்த்திகளுக்கு உரிய அவி பாகத்தை கொடுப்பது பிரம்மா, விஸ்ணு உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளை சமமாக மதித்து பக்தி செய்தல் |
| ஏழாவது | - | ஒருவனுச்கு ஒருத்தி என்ற கற்பு நெறியில் உரிய முறைப்படி விவாகம் செய்து, நன் மக்களைப்பெற்று, சந்தானவிருத்தி செய்வது. தவறியவர்களின் நிலையை இந்திரன், சந்திரன் இராவணன், கோவலன் முதலியோரைச் சனி தோசம் தொடர்ந்ததை நினைவில் கொள்ளல். |
| எட்டாவது | - | பாவம் செய்தவனும், மனம்வருந்தி பாவ விமோசனம்தேடி இறைவன் திருவடியில் வீழ்ந்து வணங்கி மீண்டும் அந்தப் பாவத்தை செய்ய மாட்டோம் என உறுதிகூறி, அந்த விரதம் காத்து, மீண்டும் அந்தப் பாவத்தை செய்யாது இறைவனை உரிய வேத ஆகம முறைப்படி வணங்கி வாழ்த்தல். முற்றாவெண் திங்கள், சந்திரன் |
| ஒன்பதாவது | - | கர்மம் அனைத்தையும் நிஸ்காமிய கர்மயோக மாக மாற்றுதல். |
| பத்தாவது | - | தூய வாழ்க்கை, இறை நம்பிக்கை, சத்திய வேட்கை, அருட்தாகம் இறைவனை இந்த பிறவியிலேயே அடையவேண்டும் என்ற ஓர் உறுதியான நிச்சயம். |

இத்தனை விடயங்களையும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

''கற்றாங்கு எரி ஓம்பி கலியை வாராமே செற்றார்'' என்னும் சொற்றொடரில் வைத்துக் காட்டினார். சனிதோசம் நீங்கியவர்க்கே, உலகத்தின் அதிதெய்வமாக விளங்கும் இறைவன் காட்சிக்கு வருவார் எனச்சுட்டிக் காட்டினார் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

எனவே கற்றவர் மட்டுமே நூல் வழித் தியானம் செய்யும் அதிகாரம் உடையவர் எனக்கூறி உலக அதிதெய்வத்தின் நூல்வழித் தியானத்தை ஆரம்பிக்கின்றார் ஓர் தேவாரத்தில், திருஞானசம்பந்த மூர்த்திநாயனார்.

கற்றாங்கு எரி ஓம்பி கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றப்பலமேய
முற்றாவெண் திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

இறைவனின் நற்றாள் தொழக் கற்றவர்க்கே. இறைவன் அனல் வடிவாக உயிரிலும் இந்த பிரபஞ்சத்தின் மத்தியிலும் எழுந்து நிற்பது புலனாகும். இந்த சிவலிங்கத்தில் இருந்து ஒன்பது வகையான அருள் வடிவங்களை சிவபெருமான் எடுத்து அருள்பாலிப்பதை சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம் ஒன்றின்மூலம் தியானிப்போமாக. உலகத்தைக் கண்டோம். உலக வாழ்க்கைக்கு தேவையான உணவு, உடை, வீடு இவற்றைப்பெற உழைப்பு எனும் சேவையே வழி எனக் கண்டோம். அதற்க்கு கூலி பணம் இந்தப்பணத்தின் வழியே இன்பதுன்பம், பிறப்பு, வாழ்வு, இறப்பு என்ற பொருள்களையும் கண்டோம். இவை நாம் செய்த பாவ புண்ணிய கர்ம வினைவழி வருவது, இதனை நமக்கு அளந்து கொடுக்கும் இறைவன், அனைத்து உயிர்களுக்கும் உலகங்களுக்கும், தாயும் தந்தையுமாக இருக்கின்றார். அனைத்து உயிர்களும் எம் உடன் பிறப்புக்கள். இந்த உலகத்தின் அதி தெய்வமாகிய இறைவன் இந்தப் பிரபஞ்சத்தின் மத்தியில் அனல் வடிவாகிய சதாசிவ மூர்த்தியாகவும் எமது நெஞ்சில், நெஞ்சக் கனலான ஜீவனாகவும், உயிருக்கு துணையாக இருக்கின்றார் என்னும் இந்த அனல் வடிவாகிய இறைவனை, சகல சனி தோசங்களையும் கல்வி அறிவினால் நீக்கி உரிய வேதாகம முறைப்படி வாழ்தலை கற்றாங்கு எரி ஓம்பி என்னும் சொற்றொடரில் கண்டுகொண்டோம்.

இப்படி அனல் வடிவாக திகழும் சிவலிங்கத்தில் இறைவனின் ஒன்பது வடிவங்களை அர்ச்சனையால் எழுந்து அருளச் செய்து, வழிபடும் முறைகளை சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம் ஒன்றின் மூலம் தியானிப்போம்.

பித்தாபிறை சூடி பெருமானே அருளாளா
எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணை தென்பால் வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள்
அத்தா உனக்காளாகினேன் அல்லேன் எனலாமே.

இறைவன் தமக்கு அர்ச்சனை செய்வதற்குரிய பக்குவம் அளித்த முறைகளைச் சுட்டிக்காட்டி அந்த பக்குவம் அளித்த திருச்



செயல்களுக்கு நன்றி கூறுகின்றார். பெண்மை வடிவாக, தாய்மை வடிவாக, இந்த உலகில் நின்று உணவு மயத் தீர்த்தங்களை தந்தார். பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, பழச்சாறு, நன்னீர், உவர்நீர், அந்த தாய்மைக்கோலத்தில் இருந்து பெற்றேன். அதனால் நெய்கடலில் சூரியனாகவும், நட்சேத்திரங்களாகவும் இந்தப் பிரபஞ்சத்தில் அனல்வடிவான சதாசிவலிங்கமும், உயிர்களின், நெஞ்சக் கனலாகிய அனல் வடிவச்சிவலிங்கமும் தந்து, உலகத்தையும், ஒவ்வோர் உயிரின் உடல் உயிர் சேர்க்கையையும் அருட் துறையாகிய நல்லூர் ஆக்கினீர். அதற்க்கு நன்றி செலுத்துகின்றேன்.

பெண்மையை வைத்தாய், அதனுடாக பால் வெண்ணை தந்தாய், அதனால் அனல் வடிவ சிவலிங்கம் அர்ச்சனை செய்வதற்காக மலர்ந்தது. எனவே நல்லூர் அருட்துறையில் அமர்ந்து இருந்து அர்ச்சனை ஆரம்பிக்கின்றேன்.

பித்தாபிறைசூடி பெருமானே அருள் ஆளா
எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை அத்தா.

பித்தா என்பது ஆரம்ப அர்ச்சனை மந்திரமாகவும் பிறை சூடி மானே பெருமானே அருள் ஆளா எத்தால் மறவாதே என்பன மந்திரமாகவும் நினைக்கின்றேன் மனத்து உன்னை என்பன 9 மந்திரங்களாகவும் அத்தா என்பது ஒரு மந்திரமாகவும் சேர்ந்த 10 மந்திரங்கள் இந்த இரு அடிகளிலும் அமைந்து இருப்பதை ஒவ்வொன்றாக தியானத்தில் படிப்படியாக நிறுத்துவோம்.

பித்தா என்பது வித்து ஆகிய பீஜம் பிரணவம் அனைத்து மந்திரங்களுக்கும் வித்து. அந்த பிரணவத்தின் வித்தில் ஏனைய மந்திரங்கள். எனவே ஓம் பீஜாயநம; என பிரம மூர்த்தியை எழுந்தருளச்செய்தார். எனவே சகல மந்திரங்களுக்கும் வித்தாகிய பிரமமூர்த்தியே எழுந்தருள்க. நாம் கற்றகல்வியின் பயனாக நூல் வழித் தியானம் செய்யப்போகின்றோம். எனவே அனைத்து மந்திரங்களையும் நினைவில் நிறுத்தும்படி வேண்டுதல் செய்கின்றேன். இந்த நூல் வழித் தியானம் சித்திக்க அருள் புரிவாயாக! பிறைசூடி ஓம் சந்திரசேகராய நம; பாவத்தின் சின்னமாக திகழும் சந்திரனை வேதமந்திரங்கள் என்ற சடாமுடியில் வைத்து புனித கங்கையால் அவருக்கு பாவவிமோசனம் கொடுத்து தூயவனாக்கி 16 கலைகளுடன் அவனைத் திகழச் செய்து; உமது தூக்கிய திருவடியில் முக்தி இன்பம்

அளித்த கருணைக் கடலே! என்னை சகல பகைவர்களிடத்தும் இருந்து காத்து அருள்க. என காத்தல் தெய்வமாகிய மாகாவிஸ்ணுவை எழுந்தருளிவரும்படி அர்ச்சனை செய்கின்றார்.

எனவே பிறைசூடி என்ற பதம் ஓம் ஆத்மாய நம; ஓம் ஆத்மானந்தாய நம; ஓம் பரமாத்மாய நம; என்ற பற்பல விதமான மந்திரங்களை தியானிக்க உதவும் வித்து மந்திரமாகின்றது. இப்படி சுத்த தத்துவங்களை இயக்கும் பிரணவ சக்தியாக விந்து சக்தியை பிரமவடிவாகவும், வித்தியா தத்துவங்களை இயக்கும் மோகினி சக்தியை விஸ்ணு வடிவாகவும், எழுந்தருளச்செய்து, பிரணவத்தின் மூன்றாவது பகுதியான உருத்திர சக்தியான மான் சக்தியை எழுந்தருளச் செய்து ஆத்மதத்துவங்களை இயக்கும்படி விண்ணப்பம் செய்ய, மானே! என்றார். எனவே ஓம் சிவாயநம; என உருத்திர மூர்த்தியை எழுந்தருளச் செய்தார்.

எனவே; உருத்திரமூர்த்தியே! நூல் வழித் தியானம் செய்யும் என் காட்சியில் இருந்து எனக்கு உபத்தியாய் உள்ள, சகல பொருட்களையும் நீக்கி உமது பாதுகாப்பில் வைத்து இருப்பீர் ஆக! என்றார். மகேஸ்வர முக்தியே எழுந்தருளி சகல ஆவரண சக்திகளையும் நீக்கி இறைவனின் அருள்வடிவங்களை தரிசிக்க உதவுவீராக என்பதை. பெருமானே! என்றார் ஓம் மகேஸ்வரராய நம;

பித்தா பிறைசூடி பெருமானே.

இப்பொழுது உமது சிவலிங்க வடிவில் சதாசிவ மூர்த்தியாக எழுந்தருளி அனைத்து அருள் வடிவங்களுக்கும் அதி தெய்வமாக இருந்து எனது பாவங்கள் அனைத்தையும் உமது திருவருளால் கழுவி நீக்கிவிடுவீராக! ஓம் சதாசிவாய நம.

பித்தா! பிறைசூடி!! பெருமானே! அருளாளா!!

சதாசிவமூர்த்தியே இந்த உலகத்தின் மத்தியில் சதாசிவ லிங்கமாகவும் என் உள்ளத்தில் ஆன்மலிங்கமாகவும் எழுந்தருளி, என் வழிபாட்டிற்காக எழுந்தருளிய பிரம்மா, விஸ்ணு உருத்திரன், மகேஸ்வரர் மூர்த்திகளை உம்முடன் சேர்த்து அருளி நாத பிரமமாகவும் விந்து பிரமமாகவும், கலாபிரமம் ஆகவும் எழுந்தருளி வந்து எனது அர்ச்சனை வழிபாட்டை ஏற்பீராக.



எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை

ஓம் நாதாயநம; ஓம் விந்தாய நம; ஓம் கலாயநம ஓம்கலாச் சேத்ராய நம; என அர்ச்சனை மந்திரங்கள் தொடர்ந்து செல்கின்றன.

நாதவிந்து கலா மந்திர தேவர்களுடன் உரிய மந்திர ரிஷிகளையும் பரமவடிவாக எழுந்தருளி 5 முகமுடைய வேதபுருடனாக, பரம ரூபனாக எழுந்தருளி அனைத்து மந்திரங்களையும் ஏற்றுக்கொள்வீராக.

அத்தா! ஓம் பரமாய நம! எனத் தொடர்ந்து மந்திரங்கள் செல்கின்றன. மணி பூராகம் முதல் சகஸ்கரம் ஈறாக, குண்டலினி சக்தி தீபத்தை வளர்த்து ஒன்பது அருள் வடிவங்களையும், பரமவடிவத்தையும், போற்றி வணங்கி வழிபாடு ஆகிய நூல் வழித் தியானம் செய்து, பின்பு இத்தனை தெய்வ வடிவங்களையும் உரிய உப சாங்கபீடத்தில் ஆகுதி செய்ய சிதம்பர மூர்த்தியை எழுந்தருளி வரும்படி விண்ணப்பம் செய்கின்றார் சுந்தரமூர்த்திநாயனார்.

வைத்தாய் பெண்ணை! நல்லூர் அருட்துறையுள் அத்தா!! என ஓம் நமசிவாய நம; என மந்திரங்கள் அனைத்துக்கும் மூலமாய் விளங்கும் பஞ்சாட்சர மூல மந்திரவடித்தை உடைய சிதம் பரமூர்தியை எழுந்தருள செய்து போற்றி வணங்கி உரிய உடமைப் பொருள்களை உரிய உபசாங்கத்தில் ஆகுதிசெய்து சுத்த ஆன்ம நிவேதனத்தை 'வ' திருவடியில் ஆகுதி செய்கிறார்.

" அத்தா உனக்கு ஆளாகினேன் "

எனவே சகல உபத்திகளிலும் இருந்து விடுபட்டு, ஆன்ம நிவேதனம்செய்து துன்பம் இல்லா இன்பம் நிறைந்த பேர்இன்பத்தை பேசா அனுபூதியை அடைந்தேன். எனக்கு இனி ஒரு அல்லலும் இல்லை. இப்படி நிற்கும் சுந்தரமூர்த்திநாயனாரைச் சேக்கிழார் பெருமான் ஓர் புராணப் பாடலில் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையேயாக குணம்ஒரு மூன்றும்
திருந்து சாத்வீகமேயாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையின் தனிப்பெரும் கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மகிழ்ந்தார்.

இப்படி உரிய முறைப்படி உலகத்திற்கு அதிதெய்வமாக திக

மும் இறைவனை அர்ச்சனை மூலம் எழுந்தருளச் செய்யும் தேவாரத்தை நாம் மீண்டும் ஒருமுறை தியானம் செய்வோம்.

பித்தாபிறை சூடி பெருமானே அருளாளா
எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை
வைத்தாய் பெண்ணை தென்பால் வெண்ணை நல்லூர் அருட்டுறையுள்
அத்தா உனக்கு ஆளாயினி அல்லேன் எனலாமே.

இப்படி 'வ' அட்சர பதத்தில் ஒடுங்கிய ஆன்மா மீண்டும் ஒடுங்கியவாறு பிரிந்து வருகின்றார். ஓம நமசிவாய என்ற கிரம முறையில் உலகில் இருந்து சிதம்பர முக்தியை தரிசித்து ஆத்ம நிவேதனத்தை சிவாய சிவ சி என செய்து, ஒடுங்கி மீண்டும் சி சிவ சிவாய என்ற கிரம முறையாக மீண்டும் பரஉலக நிலைக்கு வருகின்றார். பர உலகில் சிவபெருமானின் குரு வடிவத்தை ஆவாகனம் செய்து நிற்கின்றார். மாணிக்கவாசக சுவாமிகள் ஓர் திருவாசகத்தில்

பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி
உவப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கு எழுந்தருளுவது இனியே.

படிப்படியாக பசுகரணங்கள் அனைத்தும் குருவின் அருளால் பதிகரங்கள் ஆயின. குருவதியும் வீடாக சாதகனின் சரீரம் மாறி விட்டது. பிரகாசமான அக ஒளி, ஆன்மா பரம ஆனந்த வெள்ளத்தில், ஆனந்தமய சரீரத்தில் சுகம் காண்கின்றது. இந்தநிலை தந்த இறைவனின் ஏனைய திருவடிகளைப் போற்றி, குருவடிவத்தை புகழ்ந்து வணங்குகின்றார்.

இயற்கையில் தாய்மை வடிவில் எழுந்து அருளி, உணவு ஆகிய பால் முதலிய ஏழுவகை தீர்த்தங்களினால் ஏழுவகை ஒளியாக, ஆன்ம லிங்கத்தில் எழுந்தருளி, அந்த ஆன்ம லிங்கத்தில் அருள்பர வடிவாக எழுந்தருளி, சிதம்பர தரிசனம் தந்து, பஞ்சாட்சர திருமேனியாகிய குருவடிவத்தில் எழுந்தருளி, என் ஊன் உடலை மறைத்து ஞான ஒளியாக திகழும் சிவனே, அந்த ஞானாமிர்த தேனில் ஆனந்தம் கொண்டேன். இதுவல்லவா உண்மையான செல்வம். உன்னை நான் விட்டுப் பிரியமாட்டேன். அத்துவிதமாக, இந்த



குருவின் திருமேனியில் கலந்து இன்புறுவேன். என்னை விட்டுப் பிரிந்துவிடாதே இப்படி பஞ்சாட்சர ஞானத் திருமேனியான குருவை, நாயகனாகவும், என்னை நாயகியாகவும், குருசேத்திரமாகிய இந்த சரீரத்தை வீடாகவும் கொண்டு, வீட்டு அறம்பேணும் முறையில், அந்த குருவடிவைப் பேணுகின்றார் மாணிக்கவாசக சுவாமிகள்.

குருவின் ஞான அமிர்த அருள் திருமேனியில் அத்துவிதமாய் கலந்து இன்புறுவதே' கல்வியின் பயன். எனவே திருவுடன் இசைந்து வாழ்வது திருவிசைப்பா ஆகின்றது. இந்தக் குருவின் திருமேனி கேட்டதைக் கொடுக்கும் கற்பகதரு. எனவே கற்றவர் உள்ளத்தே பஞ்சாட்சர திருமேனி கொண்ட, குருவடிவின் அருள்திருமேனி நூல்வழித் தியானம் செய்யும். கற்றவர்க்கே உரியது. எனவே கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை என்றார்.

சிப்பியில் முத்து விளைவதுபோல. இந்த மானிட சரீரத்தில் விளைந்த முத்து இந்த நூல்வழித் தியானம் செய்ய தெரியாதவர்கட்கு தெரியாத ஒரு மாணிக்கமலை. யார் இறைவனை மதித்து, தியானம் பண்ணுகின்றார்களோ, அவர்கட்கு அகமும், புறமும் இருள் நீக்கும் ஞானஒளி. இந்த ஒளி நூல்வழித் தியானம் செய்யும் திருத்தொண்டர்களுக்கு குளிர் நிலவு. ஆனால் மறவழி செல்லும் தீயோரைச் சுட்டெரிக்கும் நெருப்பு. இப்படி முக்கண் பெருமான் குரு மூர்த்தமாக வீற்று இருக்ககண்டு, என் உள்ளம் குளிர்ந்தன. கண்களும் தம் பயன்களைப் பெற்றன.

கற்றவர் விழுங்கும் கற்பக கனியை
கரையிலா கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்கமாலையை
மதிப்பவர் மனமணி விளக்கை
செற்றவர் புரங்கள் செற்றெவெம் சிவனை
திருவீழிமிழலை வீற்று இருந்த
கொற்றவன் தன்னைக்கண்டு கண்டு உள்ளம்
குளிர என் கண் குளிர்ந்தனவே.

இந்த குருவின் திருமேனியும், அந்த குருவின் திருமேனி தந்த சிதம்பரமூர்த்தியும் பல்லாண்டு வாழ்க என பஞ்சாட்சர வடிவத் திருமேனியைப் போற்றுகின்றார்.

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிட
பாற்கடல் ஈந்த பிரான்
மாலுக்குச் சக்கரம் அன்று அருள்
செய்தவன் மன்னிய தில்லை தன்னுள்

ஆலிக்கும் அந்தணர்கள் வாழ்கின்ற
தில்லைச் சிற்றம்பலமே இடமாக
பாலித்து நட்டம் பயில வல்லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

தில்லைவாழ் அந்தணர்கள் முப்போதும் நூல்வழித் தியானம்செய்து குஞ்சித பாதத்தில் மூழ்கி, பரசரீரம் பெற்று அருள் சரீரம் பெற்று திருத்தொண்டராகி, திருத்தொண்டு ஆகிய ஏகனாகி இறைபணி நிற்பர். இதனால ஆலிக்கும் அந்தணர்கள், தில்லைச் சிற்றம்பலமே இடமாக வாழ்ந்து நிற்பர். இறைவனும் பஞ்சகிருத்தியம் புரிந்துகொண்டே இருப்பர். இப்படி அகில உயிர்களுக்கும் உணவு ஆகிய பாலைக் கொடுக்க தனது திருவருட் சக்தியை படர விடும்போது அந்தச் சக்தி, எண் குணமாகிய, தாய்மையாகத் தொடர்ந்து அக இயற்கையும், புற இயற்கையும் நடத்தி நிற்கும். இப்படி பாலித்து நட்டம பயிலவல்ல சிதம்பர மூர்த்தியையும் அந்த மூர்த்தியின் பஞ்சாட்சர குருத்திருமேனியையும் பரதிருமேனியையும் அருட்திருமேனியையும் நூல்வழித் தியானம் செய்யும் மெய்யடியார்கள் பல்லாண்டு நிலைத்து இருக்கட்டும் என வாழ்த்தினார்.

இப்படி உலகத்தில் உணவு, உடை, பாதுகாப்பு, காசு, நல்ல குடிப்பிறப்பு, நல்இறப்பு தரும் அதிதெய்வமாகிய சிவனும் சக்தியும் ஒவ்வொரு ஆன்மாவிலும் ஆன்ம லிங்கமாக திகழ உரிய முறையில் அர்ச்சனை செய்து இறைவனின தடத்தலட்சண வடிவங்களையும், சிறப்பு வடிவமாகிய நடராஜ வடிவத்தையும் எழுந்தருளச் செய்து போற்றித் துதித்து, அவரின பஞ்சாட்சர குருதிருமேனியும், பரதிருமேனியும, அருட்திருமேனியும் இந்த குருச்சேத்திரமாகிய மானிட சரீரத்தில பெற்று வாழ்தலை ''பார்ப்பசு ஐந்துய'' என்றார் திருமூலநாயனார். குருத்திருமேனி காட்ட காண்பவனே பார்ப்பான். இப்படிப் பார்ப்பான அகத்தே பார்ப்பசு ஐந்து உள. அவைகளை நாம் உரிய முறையில் நூல்வழித் தியானம் செய்ய இறைவனே குருவாக வந்து நல் ஆயனாக நல்லனவெல்லாம காட்டி பசுவாகிய ஆன்மாவை வளர்ப்பான். அப்பொழுது இறைவனை வழிபடும மந்திரங்கள் அனைத்தும் கிடைக்கும என மீண்டும் சிதம்பர முக்தியின் உபசாங்களை குருமூர்த்தமாக வழிபடுதலைச் சுட்டிக் காட்டுகின்றார். இந்த வழிபாடு பதஞ்சலி, வியாக்கிரம பாதர், சிவஞானமுனிவர், திருமூலர் போன்ற பெரியார்களால் திருநடனக் காட்சி கண்டு மகிழப்படுவது. எனவே உபசாங்க சக்திகள் பார்ப்பசு ஐந்து ஆயின.



பார்ப்பான் அகத்திலே பார்ப்பசு ஐந்துள
மேய்ப்பாரும் இன்றி வெறிந்து திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய் சொரியுமே.

இப்படி பரவடிவ ஐந்து முகத்திலும் இருந்து, உரிய மந்திரங்களையும், கிரியைகளை செய்யும் அதிகாரத்தையும், பெற்றுக் கொண்டு திருத்தொண்டர் 'உலகமே பரமன் கோயில், உயிர்களே அவரின்வீடு, என உணர்ந்து, கர்மயோகம், பக்தியோகம், ஞான யோகம் செய்ய சிதம்பர மூர்த்தியை வணங்கி விடைபெற்றுக்கொண்டு வருகின்றார்கள் எனச் சேக்கிழார் பெருமான். திருத்தொண்டர் சரித்திரத்தைப் பாடுதல் ஆகிய கர்மயோகம் இயற்ற.

உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மல்கி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

இப்படி சிதம்பரமூர்த்தியை நூல்வழித் தியானம் செய்து கொண்டு வந்த அருணகிரிநாதர் தன் இஷ்டமூர்த்தி தனக்கு குருவாக இருந்து கண்டு காட்டிய நூல் வழித் தியானத்தை தொடர்கின்றார். தனது நூல் வழித் தியான பலனை முருகப்பெருமானின் பாதார விந்தங்களில் சமர்ப்பணம் செய்கின்றார்.

நீலம்கொள் மேகத்தின் மயில்மீதே
நீ வந்த வாழ்வைக்கண்டு அதனாலே
மால் தங்கும் பேதைக்குன் மண நாளும்
மார்தாங்கும் தாரைதந்து அருள்வாயே
வேல்கொண்டு வேலைப் பண்டு எறிவோனே
வீரம்கொள்சூரர்க்குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நான் என்று மார்தட்டும் பெருமானே.

அருணகிரிநாதர் எங்களுக்கு ஓர் அறிவுரை அருளுகின்றார். பஞ்சபுராணத்தின்மூலம் திருத்தொண்டர் வழித் தியானம் செய்தீர்களே இது புதியது அல்ல. மிகவும் பழைய காலத்து நெறி, கந்தப்புராணத்தில் வியாசபகவான் கச்சியப்ப சிவாச்சாரியாருக்கு அறிமுகம் செய்ய, அவர் எனக்கு அறிமுகம் செய்தார். இந்த நூலை எழுதும் எனக்கு அருணகிரிநாதர் அறிமுகம் செய்தார். இப்படி முருகப்பெருமான் சூரனை ஒடுக்க திருஅவதாரம் செய்த காலம்தொட்டு தமிழ்நெறியில் தொடர்ந்து வருகின்றது. உலகம்

அதிதெய்வம் அர்ச்சனை, குருவடிவம், குருவடிவத்தின் அருள், பரம் பஞ்சாட்சர, திருமேனிகள் அனைத்தையும் தாங்கியே முருகப்பெருமான் சூரர் இனத்தை ஒடுக்கி தேவர் குலத்தில் தெய்வநாயகியை மணந்து பக்தர்களைக் காத்தார் என தன் இஸ்டதெய்வம் இந்த நூல் வழித் தியானத்தை தந்த வரலாற்றை கூறுகின்றார் அருணகிரிநாதர்.

நாரதமுனிவர், பால் உணவு முதலிய ஏழு வகைத் தீர்த்தங்களை நினைவு படுத்தும் சிவசின்னமாகிய மாங்கனி ஒன்றுடன் திருக்கைலைக்கு வருகின்றார். வந்து இந்த நூல்வழித் தியானத்தை தொடக்குகின்றார். மாங்கனி யாருக்கு. விநாயகருக்கா அல்லது முருகனுக்கா ஓர்போட்டிப்பரீட்சை. இந்த மாங்கனி உலகத்தைக் குறிக்கிறது. உலகம் முழுவதையும் யார் சுற்றி வருகின்றாரோ? அவருக்கே கனி என்ற தீர்மானம் எடுக்கப்படுகின்றது.

முருகப்பெருமான் நீலங்கொள் மேகத்தின் மயில்மீது ஏறி மேல் ஏழ் உலகையும் கீழ் உலகையும் சுற்றிவந்தார். விநாயகப் பெருமான் உலகு என்றால் உலகத்தின் அதிதெய்வம் சக்தியும் சிவமும் என நிச்சயித்தார். அம்மை அப்பன் இருவரையும் வலம் வந்து கனியைப்பெற்றார். உலகம் என்றால் ஈரேழு உலகம். உலகத்தின் அதிதெய்வம் சக்தியும் சிவமும். இந்த தீர்ப்பு பிழை என்று மகா உருத்திரரின் கோபம்போல பொங்கி எழுந்து பழனிக்கு வருகின்றார் முருகப் பெருமான். அவர் பழனி மலையில் இருந்து மாதவம் செய்கின்றார். இருந்த இடத்தில் இருந்துகொண்டு அர்ச்சசனை நடக்கிறது. இறைவன் தனது சகல சிவரூபவடிவங்களுடன் எழுந்தருளி காட்சி கொடுக்கிறார். குருவடிவாக முருகப்பெருமான் மாதவத்தின்மூலம் மகிழ்கின்றார். ஔவையாரிடம் முருகப்பெருமான் இசை, இயல நாடக தமிழ் வழித் தியானம் பெற்று ஞானக்கனியான நாவல் கனி கொடுத்து மகிழ்கின்றார். ஔவையாருக்கு நாவல்கனி கொடுத்தது தான். அந்த கனி! உலகம்! அதிதெய்வம்! அர்ச்சனை முதலிய நூல்வழித் தியானத்தை விநாயகப்பெருமானை இஸ்டதெய்வமாகக் கொண்டு செய்துகாட்டி மகிழ்கின்றார் ஔவை மூதாட்டி. எனவே பஞ்சபுராணத் திருத்தொண்டர் வழித் தியானம் மிகவும் பழமையானது. திருத்தொண்டர்களால் தொடர்ந்து பேணப்பட்டு தலைமுறை தலைமுறையாக தொடர்ந்து வருவது.

அருணகிரிநாதர் திருப்புகழை நாம் நூல் வழித் தியானத்தில் வைத்து இஸ்ட மூர்த்தியாகிய முருகப்பெருமானையும் அருணகிரிப் பெருமானையும் சேர்த்து தியானிப்போம்.



நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண்டு அதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கும் தாரை தந்து அருள்வாயே
வேல் கொண்டு வேலைப் பண்டு எறிவோனே
வீரம்கொள் சூரர்க்குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நான் என்று மார்தட்டும் பெருமானே.

நீலகொள் மேகத்தின் மயில்மீது முருகப்பெருமான் தான் எப்படி மாங்கனிக்காக ஈரேழு உலகமும் வலம்வந்தாரோ? அப்படி என்னையும் தன் மயில்மீது இருத்தி ஈரெழு உலகமும் காட்டினார்.

ஏழு வகை உலகம், ஏழுவகை தீவுகள், ஏழுவகை மேகங்கள், ஏழுவகை மலைகள், ஏழுவகை நதிகள், ஏழுவகை கடல்கள், ஏழுவகை சந்திரசூரியர்கள் அனைத்தையும் காட்டி இந்த உலகத்திற்கு தந்தையும் தாயும் சிவனும் சக்தியுமே என தான் கண்டவாறு எனக்கு கண்டு காட்டினார்.

அதனால் நெற்றிக் கண்ணில் இருந்து அனல் வடிவமாக எழுந்து வந்த ஆறுமுகப் பெருமான் என் நெஞ்சத்து அனல் வடிவாகிய ஆன்மலிங்கமாக அமர்ந்தார். பழனியில் அவர் மாதவம் செய்ய அமர்ந்து இருந்தவாறு அமர்ந்து இருந்து ஆன்மலிங்க அர்ச்சனை செய்து சிவபெருமானின் 10 அர்ச்சனை வடிவங்களையும் எழுந்தருளச்செய்து போற்றித்துதித்து வணங்கினார்.

நீல மயில்மீதே, நீ வந்த வாழ்வைக்கண்டு அதனாலே மால் கொண்ட பேதைக்கு உன்மணநாறும் மார்தங்கும் தாரை தந்து அருள்வாயே என்றார். முருகப்பெருமான் வேலுடன் குருவாய் அமர்ந்து இருந்தார். அதனால் எனது அசுர சக்திகள் யாவும் ஒடுங்கின வேத புருட வடிவாகிய மாமரம் காட்சிக்கு வந்தது. அதனால் வேத வேதாந்த ஞானம் சித்தித்தது. அதனால் பேதையின் நெஞ்சில் இருந்த மால் மும்மலம் நீங்கியது. வேல்கொண்டு எறிந்த வேலைப்பண்டு அருள் பரம் ஆகிய குருவடிவங்களைத்தந்தன. எனவே 6 முகத்திலும் கோத்திர ரிசிகள் தோன்றி அனைத்து மந்திரங்களையும் தந்தனர். நான் மறையினால் நான் உன்னை வணங்கும் பாக்கியம் பெற்றேன். இப்படி உன்னை திருப்புகழால் அர்ச்சனை செய்து வழிபட்டுப் பெற்ற எனது தெய்வீக அனுபவத்தை கந்தர் அனுபூதியில் எடுத்துச் செல்தல் ஆகிய இறைகடமையில் ஈடுபட்டேன். இந்த

வேளையில் உனது இஸ்டமாகிய கடவுள் எங்கே என்று கேட்கும் போது அவர் என் உள்ளத்தில் இருக்கின்றார் என என் மார்பு தொட்டு சொல்லும் படியாக என்னைவிட்டு நீங்காத குருவே! வாழ்க!! முருகப்பெருமான் வாழ்க!! நான் என்று மார்தட்டும் பெருமானே!

இப்படி இஸ்டதெய்வமாகிய முருகனை வழிபட்டு உலக நினைவுக்கு வருகின்றார். தனது பூசையையும், பூசைப் பலனையும் முருகப்பெருமானுக்கு சமர்ப்பணம் செய்கிறார் அருணகிரிநாதர் கந்தர் அனுபூதி அவையடக்கப் பாடலில்.

யாம் ஓதிய கல்வியும் மெய் அறிவும்
தாமே பெற வேலவர் தந்ததனால்
பூமேல் மயல் அறப்போய் மெய்ப் புணர்வீர்
நாமே நடவீர் நடவீர் இனியே.

இந்த நூல் வழித் தியானத்தில் ஈடுபட்ட அனைவருக்கும் நன்றி கூறுகின்றார் அருணகிரிநாதர். ஐயா! நாம் உமக்கு கூறிய உண்மைகள் அனைத்தும்! எனது என்று கருத வேண்டாம். நீங்கள் செய்த தவப்பயனால் நானும் உங்களோடு சேர்ந்து முருகப் பெருமான் உங்களுக்குத் தந்த அருள் ஞானத்தை நானும் தெரிந்து கொண்டேன். உங்களுக்கு அல்லவா நான் நன்றி சொல்லவேண்டும். நீங்கள் காலாகாலமாக முருகப்பெருமானிடம் அழுது புலம்பி மாயாவாத பெரும்புயல் தன்னில் அகப்பட்டு தத்தளித்து ஞானபண்டிதனாகிய முருகா! நீ பார்த்துக்கொண்டு இருக்கலாமா? எமக்கு தமிழ்மொழிமூலம், உன்னைத்தியானித்து அருள்பெற வழி காட்ட மாட்டாயா? என முருக பக்தர்களாகிய நீங்கள் வேண்டுதல் செய்தற்காக! அந்த முருகப்பெருமானோ ஏதும் அறியாது வெறுமனே சும்மா இருந்து என்னை ஓர் ஊடகமாக வைத்து இந்த நூல்வழித் தியானத்தை உங்களுக்கு அளிக்க சித்தங்கொண்டார். அந்த நூல வழித் தியானத்தை என் உடல்பொருள் ஆவியை ஆரோகித்து உங்களுக்குத் தந்தார். இந்த உண்மைகளை நானும் உங்களோடு சேர்ந்து அறிந்துகொண்டேன். எனவே இன்றுமுதல் இந்த பூமியில் நாங்கள் வாழும்வரை எங்களுக்கு மயல் தருகின்ற காமமோக மதலோப மாச்சரிய ஆசை, அவா நீங்குதற்பொருட்டு முருகப் பெருமானை எழுந்தருளச்செய்து பஞ்சபுராணம் ஆகிய நூல்வழித் தியான நெறி நின்று சிதம்பரமூர்த்தியின் குஞ்சிதபாத நிழலில் ஒய்வு எடுத்து படிப்படியே இறங்கி வந்து முருகப்பெருமானை குருவாகக்கொண்டு எங்கள் இறைகடமைகளாகிய திருத்தொண்டை செய்வோமாக. கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூவகைத் திருத்தொண்டில் என்றும் மகிழ்ந்து வாழ்வோமாக.

வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா



---

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித்யததி ஸித்தயே
யததாம்பி ஸித்தானாம் கஸ்சின்மாம் ஸித்தயே வேத்தி தத்வத:
பூமிராபோ அனலோ வாயு: கம்மனோ புத்திரேவச:
அஹங்கார இதீயம்மே பின்னா ப்ரக்ருருதிரஷ்டதா.

ஆயிரக் கணக்கான மனிதர்களுள் யாரோ ஒருவன்
மன நிறைவின் பொருட்டு தியான முயற்சியில் உழைக்கின்றான்
முயலுகின்ற பெரு வாய்ப்பு உள்ளோர்களுக்குள்ளும்
யாரோ ஒருவன் என்னை உள்ளபடி அறிகின்றான்.

பூமி, அப்பு, அனல் வாயு, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம்
இப்படி எட்டு விதமாக என் பிரகிருதி பிரிவு பட்டு இருக்கின்றது.

ப. கீ. அதி. 7 சுலோகம் 3, 4

வானாகி மண்ணாகி வெளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான் எனது என்றவர் அவரைக்கூத்தாட்டு
வானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே.

திருவாசகம்

வானோ புனல் பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில் நான் மறையோ
யானோ மனமோ எனையான் டவிடந்
தானோ பொருளா வது சண் முகனே.

கந்தரநுபூதி



ஓம் பூ:1 ஓம்புவ:1 ஓம் ஸுவ:1 ஓம் மஹ:1
ஓம் ஜந:1 ஓம் தப:1 ஓம் ஸத்யம்:1

ஓம் தத் ஸவிதுர் - வரேண்யம்
பார்க்கோ தேவஸ்ய தீமஹி 11
தியோயோத: ப்ரசோதயாத் 1

ஓங்காரமே பூவுலகம். ஓங்காரமே புவர் உலகம் ஓங்காரமே சுவர்கஉலகம் ஓங்காரமே மஹர் உலகம் ஓங்காரமே ஜன உலகம் ஓங்காரமே தபோ உலகம் ஓங்காரமே ஸத்ய உலகம்.

ஓங்காரப் பொருளான எந்தப் பரம் பொருள் நம்முடைய புத்தி சக்திகளைத் தூண்டுகின்றாரோ? அந்த அனைத்தையும் படைத்து காத்து நீக்கி மறைத்து அருளும் இறைவனின் சோதி சொருபத்தை தியானிப்போமாக.

உண்மை விளக்கம்

ஓங்கார மேநற் றிருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் - ஆங்காரம்
அற்றார் அறிவாரணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்.

தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாம்
ஊன்று மலர்பாதத்திலுற்ற திரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.